

**இசைககுயில திருமதி. எம. எஸ. சுபபுலடசுமி அவாகளால பாடப்பெறற ''ஸ்ரீ வேங்கடேஸவரா பஞ்சரத்ன மாலா'' எனும் எல பி. இசைத்தடடு ஒனறு திருமலையில 1-10-79 அன்று வெளியிடபபட்டது.**

அன்னமாச்சாாயா கீர்த்தனைகள பொறிககப பெறற செபபேடுகள் வைககபபெறறிருநத ரகசிய அறையின முன் (திருமலைக் கோயிலில்) திருமதி. எம். எஸ. சுப்புலட்சுமி அவாகளும் மறறும தி.தி.தே. உயா அலுவலர்களும்.



திருமலைக் கோயிலில் புதிய எல்.பி. இசைத தடடுடன திருமதி எம.எஸ. சுபபுலட்சுமி, ஆநதிர மாநில அறநிலைய ஆணையா மறறும் தி.தி தே. உயா அலுவலர்கள்.



திருமதி. எம். எஸ. சுப்புலட்சுமி அவாகள், தி.தி.தே. செயலாட்சித் தலைவா திரு. பி.வி ஆா.கே. பிரஸாத் அவாகளால கௌரவிக்கப்படுகிறுர்.



*மனிதனிடம் நிறமுண்டு, இனமுண்டு, ஜாதியுண்டு, சமயமுண்டு*
*மனம்திறந்துபேச அவனிடம் அச்சமுண்டு, குறுகிய எண்ணமுண்டு*
*தினம் பிறந்ததும் நாட்டில் போட்டிஉண்டு, பொருமைஉண்டு*
*எல்லாமுண்டு-ஆனுல்*
*தினம பிறந்தாலும் மழலையின் சிரிப்பில் அழுகையில் இறைவனின்*
*தோற்றமுண்டு.*

புகைப்படம்: திரு. ஏ. நரசிமமாராவ்,
*பாபட்லா.*

தனிப்பிரதி 50 காசு
வருடச் சந்தா ரூ. 6

*சிறப்பாசிரியர்*
**திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,**
*செயலாட்சித்தலைவர்,*
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர்*
**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**
*தி. தி. தேவஸ்தானம்,*
*திருப்பதி.*

*அச்சிடுபவர்*
**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
EDITOR
'Sapthagiri'
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.




# ஸப்தகிரி

**நவம்பர் 1979**

மலர் 10
இதழ் 6

## உள்ளுறை



**அட்டைப் படம்:** "இன்றைய குழந்தைகளின் நிகழ்காலமே நாளைய நாட்டின்எதிர்காலம்"

# ஆசிரியர் உரை

*" பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட் பேறு அல்ல பிற"*

*என்று செப்பிப்போந்தான வள்ளுவப் பெருந்தகையான். குடும்பக் கட்டுப்பாடு எனும் தாரக மந்திரம் இந்தியா வின மூலை முடுக்குகளிலெல்லாம் ஒலிததுக்கொண்டிருக்கும் இன்றும்கூட, என்றே கூறிய அக்குறட் கருத்து உயிர்த்துடிப் புடன் விளங்குகிறது எனின், வள்ளுவன் "அறிவறிந்த" எனும் சொல்லை பயன்படுத்தியிருப்பதால்தான். இன்று பெருகி வரும் மக்கட் தொகைக்குக் காரணமான அம்மழலைச் செல்வங்களே நாளை நாட்டின் விதியை நிர்ணயிக்கும் எதிர்காலத் தூண்கள் என்பது ஓர் உண்மைச் செய்தியாகும். நாளை நாடு ஆரோக்கியமாக விளங்க வேண்டுமாயின் இன்று குழந்தை களின் உடலும் உள்ளமும் ஆரோக்கியமாக இருத்தல் அவசியம். அவர்களுடைய நிகழ்கால வாழக்கை அறிவறிந்த உணர் வுடன் இருந்தால்தான், நாளை பாரதம் அறிவிற் சிறந்தோரின் அரவணைப்பில் பீடுநடை போடும்.*

*எண்பது வயது முதியோருக்கும் இன்பம் தருவது அவன் இளமைக்கால நினைவுகளேயாம். தன்னுடைய குழந்தைப் பருவ நினைவுகளை, பள்ளிக்குச் சென்ற நிகழ்ச்சிகளை, தான் அனறு செய்த குறும்புகளை பெரியவனானதும் தன் மனத்திரையில் ஓடவிட்டு, அவற்றினை அவ்வப்போது அசைப் போட்டுக் கொண்டேதான் இருப்பான். அத்தகு பெருமை கொண்ட, பூத்துக் குலுங்க வேண்டிய புது மலர்களான மழலைச் செல்வங்கள் இன்று வறுமை, பிணி, சுரண்டல், போர் போன்ற சமுதாயக் கொடுமைகளுகு ஆளாகியுள்ளன என்பது வருந்துதற்குரிய செய்தியாகும். இவற்றிற்குக் காரணம் தான் தனது என்ற குறுகிய மனப்பானமையும், போட்டி, பொறாமை, பகைமை போனற மறப்பண்புகளும் மனிதனிடம மண்டிவிட்டதால் தான். தான் பெற்ற பிள்ளை 'பசி பசி' என்று கதறும்போது அதைத தீர்க்க முடியா தகப்பன்மார்களும், காலை முதல் மாலை வரை தினக் கூலிக்குச் செல்லும் சிறுவர்களும் மலிந்துள்ள நாடு நம் பாரதமே. இவற்றிற்குப் பொறுப்பு சமுதாயம் என்றாலும், தனிப்பட்டவர்களைக் கொண்டதுதானே அச்சமுதாயம். விளை நிலம் சிறப்பாக இருந்தால் விளைபொருளும் செழித்தோங்கி அமையுமே! ஆம். எதிர்கால ஆரோக்கியமான குழந்தைகளின் வளர்ச்சிக்கு பெறறோர்களே மிக்கப் பொறுப்பேற்கின்றனர். பெற்றோர்களில் எத்தனை பேர் தம் குழந்தைகளுக்கு வேண்டிய அன்பையும் பாசத்தையும் ஆதரவையும் வற்றாது வழங்கியுள்ளனர் என்பதை நினைத்தல் வேண்டும். குழந்தைகள் எதிர் பார்க்கும் அவ்நியாயமான அவ்அன்பும் ஆதரவும் தம் பெற்றோர்களிடமிருந்து கிடைக்கவில்லையாயின், நாளை அக்குழந்தை களே நச்சுக் காளான்களாக மாறி, அழிவுப் பாதைக்கு நாளை நாட்டினை இழுத்துச் செல்வார்கள்.*

*இந்தப் பேருண்மையைத்தான் நமது சமய இலக்கியங்கள் அன்று முதல் இன்று வரை கூறுமல் கூறிவருகின்றன. கண்ணன இறைவனின் அவதாரம் என்பதை சற்றே மறந்து பார்த்தோமேயானால் தேவகி மைந்தனான அவன் யசோதையிடம் வளர்ந்ததால், கண்டிப்பற்ற அபரீதமான அன்புக்கு ஆளானததால், பின்னர் கண்ணன் ஊராரின் ஏச்சுக்கும், பேச்சுக்கும் ஆளானான். கண்ணனை தேவகியே வளர்த்திருந்தால், நிச்சியம் கண்ணனின் இளமைப் பருவம வேறாக இருந்திருக்கும். குந்தியின் அன்பும் ஆதரவும் சிறு வயதிலிருந்தே கிடைத்திருத்தால், கர்ணனிடம் அந்தப்பழி உணர்ச்சி வேரூன்றியிருக்காது; தீமைக்கும் துணைப் புரிந்திருக்கமாட்டான். பாரதப் போரின் விளைவுகளும் மாறாக இருந்திருக்கும். துஷ்யந்தனாலும், இராமனாலும் நிராகரிக்கப்பட்ட அவரது குமாரர்களாகிய பரதனுக்கும், லவகுசர்களுக்கும் முறையே கன்வ முனிவரும், வான்மீகியும் கிடைததிராவிட்டால், அத்தேவ மைந்தர்கள் இன்றைய இளிந்தளிர்களுக்கு ஒரு முன்னோடியாக இருந்திருக்க மாட்டார்கள். கைகசி, ஒரு பெண் என்ற முறையில் கட்டுப்பாட்டுடன் விளங்கியிருந்தால் அவளுக்கு மறப்பண்புகளுடன் கூடிய இராவணன் எனும் அரக்கன் பிறந்திருக்க மாட்டான். குழந்தைகளுக்கு வேணடிய மன உறுதி, நேர்மை, நுண்ணறிவு போன்ற உள்ளார்ந்த பண்புக்கூறுகளின் அவசியத்தை - அவற்றை மேலும் வளரச் செய்ய வேண்டியதன் இன்றியமை யாமையை - உணர்த்தத்தான் நாசி கேது, துருவன், பிரகலாதன் போன்ற சிறுவர் சம்பந்தப்பட்ட கதைகள் கூறப் பட்டுள்ளன. இது போன்ற, குழந்தைகளுக்கும், பெற்றோர்களுக்கும் வழிகாட்டும் பல கதைகள், நம் புராணங்களிலும், உப நிஷத்துக்களிலும் ஏராளமாக பொதிந்துக் கிடக்கின்றன.*

*அவை கூறும் அறிவுரைகளை எத்தனைப் பெற்றோர்கள் உணர்ந்து கொண்டார்கள்? உணர்ந்த அவர்களில் எத்தனைப் பேர் தங்களைத் திருததிக்கொண்டார்கள்? மேலும அரசுதரும் இளமைக்கல்வி முறைகள், குழந்தைகளுக்கு வேண்டியலௌகிக விஷயங்கள் சம்பந்தப்பட்ட அறிவினை வழங்குவதோடுமட்டுமின்றி, அவ்லௌகிக ஆசைகளை நேர்மையான முறைகளில் அடையச் செய்யும வகையில் ஆன்மீக அறிவினையும் வழங்கப்படுவதாக இருத்தல்வேண்டும். எண்பது வயதில் உதயமாகும் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" எனும் அருங்கருத்தினை எட்டு வயதிலேயே மனதினில் ஆழப் பதியவைக்கும் வகையில், குழந்தைகள் வளரும் இச்சமுதாயப் பூஞ்சோலையில், இன, மத, சமய வெறிகளைத தூண்டும்படியான எந்த விதமான சூழ்நிலையும் ஏற்படா வண்ணம் சம்பந்தப்பட்டவர்கள் கண்ணும கருத்துமாக இருக்க வேண்டும்.*

*ஆகவே உலகக் குழந்தைகள் ஆண்டாக இவ்வாண்டைக் கொண்டாடும் நாம், குழந்தைகளைப் பற்றி நான்கைந்து மேடைகளிவ் பேசி, நாகைந்து குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கினால் மட்டும் போதாது. 'முற்பகல் செய்யின பிற்பகல் விளையும்' என்பதினை மனதிற்கொண்டு, பெற்றோர்கள் தம் குழந்தைகளை வளர்ப்பதனை ஒரு கடமையாகக் கருதாமல், அவர் களுக்கு வேண்டிய மானசிகமான அன்பையும், பாசததையும்,ஆதரவையும் வேண்டியமட்டும் வழங்கினால்-சம்பந்தப்பட்ட அரசுகள் அரசியலுக்கு முதலிடம் தராமல், எதிர்கால இன்ப ஊற்றாக விளங்கவேண்டிய குழந்தைகளின் அடிப்படைத தேவைகளான கல்வி, மருத்துவம போன்றவற்றிற்கு தகுந்த முயற்சிகளை மேற்கொண்டால் - அதுவே, போர், பிணி, வறுமை போன்ற சமுதாயக் கொடுமைகளுக்கு இதுவரை மலர்ந்து கருகிய குழந்தைகளுக்குச செய்யும் நினைவஞ்சலியாக அமையும்; இனறு மலர்ந்துள்ள மணம் வீசும் குழந்தைகளுக்குச் செய்யும் உதவியாக அமையும்; நாளை மலரும புதுமலர்களுக்கு ஒரு நம்பிக்கை ஒளியாகத்திகழும்.*

# தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குழு முடிவுகள்

திருமலையில் 28-9-79 & 27-9-79 தேதிகளில் நடைபெற்ற குழுக்கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சிலமுக்கியமுடிவுகள் பின்வருமாறு

'இந்து தர்ம பிரசாரக சிக்ஷுண சமஸ்தா' எனும் திட்டத்தின் கீழ் ஒரு சோதனை முயற்சியாக ஓராண டுககு, தேர்ந்தெடுக்கப்பட்ட மாண வர்களுக்கு கோயில் சம்பந்தப்பட்ட அடிப்படை வைதீக முறைகளில் பயிற்சி அளிக்கும் வகையில் தி. தி. தேவஸ்தான மேலாண்மைக் குழு முடிவு ஒன்றினை மேற்கொண்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் முதலாண்டு பயிற்சி வகுப்பில் 25 மாணவர்கள் சேர்க்கப்பட்டு, மாதம் அவர்களுக்கு தலா ரூ. 200/- ஊக்க ஊதியமாக வழங்கப்படும்.

அன்னமாச்சார்யா திட்டத்தின் கீழ் 'தாஸ சாஹித்யா' எனும் துறை செயற்படும் வகையில் குழு தீர்மானம் ஒன்றினை நிறை வேற்றியுள்ளது.

சென்னை தியாகராய நகரில் உள்ள நல்லி அறக்கொடையாளரது விருப்பத்தை ஏற்கும் வகையில், ஒவ்வொரு வருடத்தின் பிரம்மோற்சவத்தின் நான்காம் நாளின்போது அவர்களிடமிருந்து இலவசமாக திருமலைக் கோயிலின் மூலவருக்கு அணிவிக்கும் வகையில் மேல்சத், உத்தரீயம், வஸ்தரங்கள் ஆகியவற்றை கோயில மரியாதையுடன் வாங்கிக் கொள்வதென்று குழு தீர்மானித்துள்ளது.

'ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலாக்ஷேத்திரம்', என்பதனை 'ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலா பீடம்' என மாற்றவும், இத்துறையின் சிறப்பு அலுவரான திரு. பி. ரஜனி காந்தராவ் அவர்கள் முன்மொழிநத திட்டத்தினை மேற்கொள்ளவும், மேலும் இத்துறையின் முதல் கட்டச் செலவுகளுக்கென ரூ. 3 இலட்சம் வழங்கவும குழு அனுமதியளித்துள்ளது.

தமிழ்நாடு மகாபலிபுரம் அரசு சிற்பக்கலை பயிற்சி நிலையத்தின் உயர் போதனையாளரான திரு. டி. குமரேச ஸ்தபதி அவர்களை திருப்பதியில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா சிறபக்கலை பயிற்சி நிலயத்தின் கண்காணிப்பாளராக நியமனம செய்த தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவரின் முடிவினை குழு ஏற்றுககொண்டுள்ளது.

பத்ராசலத்தைச் சாரநத திரு. பி. சடகோபா சாரயலு என்பவரை தி. தி. தேவஸ்தானத்தின் பாஞ்சராத்ர ஆகம ஆஸ்தான பண்டிதராக நியமிகக குழு முடிவு செய்துள்ளது.

திருமலைக் கோயிலில் அபிஷேகத்திற்கென்று பெரிய ''தக்ஷுணவர்த சங்கு'' ஒன்றினையும், இறைவனுக்கென்று 108 தக்ஷுணவர்த சங்குகளைக் கொணட மாலை ஒன்றினையும் வாங்குதற்கு குழு அனுமதி அளிததுள்ளது.

டாக்டர் திவாகால வெங்கடாவதானி அவர்கள் எழுதிய ''சுந்தர சந்தேஸம்'' எனும் நூலின் 4,000 பிரதிகளை வாங்குதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

'பத்மாவதி ஸ்ரீநிவாசம்' எனும நாட்டிய நாடகத்தை நடத்திவரும் சென்னையைச் சேர்ந்த கூச்சுபூடி ஆர்ட் அகாடமியினர்க்கு, நாடகத திற்கென புதிய ஆடை, ஆபரணங்கள் வாங்குதற்கு ரூ. 25,000 வழங்குவதென குழு தீர்மானித்துள்ளது.

திரு. நூகல சின்ன சத்யநாராயண, திரு. செம்மங்குடி ஸ்ரீநிவாச ஐயர், மிருதங்க வித்துவான் திரு. டி. எஸ். மணி ஐயர், திரு. மகாராஜபுரம் சந்தானம் ஆகியோரை தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வான்களாக நியமிக்க குழு தீர்மானித துள்ளது.



## சந்தாதாரர்களுக்கு....

*31–12–79ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எணகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக்குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்.* T

*1, 5, 6, 8, 12, 14, 16, 18, 27, 29, 41, 42, 45, 46, 47, 52, 72, 116, 121, 122, 141, 145, 147, 149, 150, 155, 160, 161, 163, 166, 172, 176, 209, 210, 211, 213, 215, 216, 251, 287, 290, 293, 294, 296, 298, 300, 301, 303, 308 முதல் 312 வரை, 314 முதல் 319 வரை, 322 முதல் 329 வரை, 332 முதல் 335 வரை, 477, 489, 499, 526, 527, 533, 534, 543, 545, 547 முதல் 562 வரை, 564, 565 முதல் 570 வரை, 573, 575, 1167 முதல் 1172 வரை, 1174 முதல் 1203 வரை, 1205 முதல் 1209 வரை, 1211 முதல் 1231 வரை, 1234 முதல் 1249 வரை, 1251 முதல் 1254 வரை, 1257 முதல் 1262 வரை, 1265 முதல் 1284 வரை, 1286 முதல் 1295 வரை, 1311 முதல் 1335 வரை, 1359, 1363, 1371, 1491, 1493.*

# பற்றுறுதி

## முன்னுரை :

நம்முடைய வாழக்கையிலே நாம் வாழ, எத்தனையோ காரியங்களை எதிர்பார்க்கிறோம். மனிதன என்ப வன் தன்னுடைய இயற்கையிலேயே அப்படிப்பட்ட குணுதிசயங்களைக கொணடவன்தான். மனிதன, தான் வாழ முயலும் போது எதையோ ஒரு இலட்சியத்தை நிறைவேற்ற வேண்டும், என்று ஆவலோடு எதிர் நோக்கி வாழ முயல்கின்ருன். வாழ்க் கையில் அவன் எதிர்பார்த்த எதிா பார்ப்புக்கள் நிறைவேறுவதுமுணடு. நிறைவேருமல் போவதுமுண்டு. இப்படி அவன் தன் வாழ்க்கையில் தான் எதிர்பார்த்த எதிர்பாாப்புகள் நிறைவேருமல் போகும் போதுதான், அவன் ஆழமாக தன வாழ்க்கையைப் பற்றி சிந்திக்க வேணடியிருக்கிறது. நிறைவேருமல் போன எண்ண அலை களினூடே அவன் தாக்கப்பட்டு, அந்தக காரியங்களை யாராவது நிறை வேற்றி வைக்கமுடியுமா எனறு அவன் ஏங்குகிருன். இப்படிப்பட்ட ஏக்கத்திலும் கூட, அவன் தன் வாழ்க்கையில் முன்னேறச் செல்ல வேண்டும் என்ற ஆர்வத்தில் ஏக்கத் தினூடே, மீண்டும் முதலில் உழைத் ததைவிட அதிகமாக உழைக்க முற படுகிருன். இருப்பினும், அவன் எதிர்பார்தத காரியம் நிறைவேரு மல் போய் விடுகிறது. மீணடும முன்னேற முயல்கிருன் மீண்டும், இயலாமை என்றும் கடும்திரள் அவனை வந்து சந்திக்கின்றது. இப்படிப்பட்ட சூழலில் தான் அவன் உண்மையிலேயே சோர்வடைந்து, இயலாமை என்னும் கடும் திரளிலி ருந்து விடுபட, 'இயலும்' என்னும் கடவுள் சக்தியிடம் உறுதியோடு சரணடைகிருன்.

## இடைநிலை – இறுதிநிலைப்பற்று

இந்த நிகழ்ச்சி வாழ்க்கை யிலே சாதாரணமாக ஏறபடுகின்ற நிகழசசியாகும். வாழககையில தான் கொணடுளள பற்று, துன்பம வரும் பொழுது அசைநது கொடுக கிறது. இப்படித்தான், மொழிப பறறு, இனபபற்று, நாட்டுப்பற்று என்பவையுமகூட. இந்தப்பற்றுக்கள் துன்பமவரும்பொழுது,துனபத்தைத தாங்கமுடியாமல மனிதன் இயல பாகவே அபபற்றிலிருந்து விலகிக் கொளள முறபடுகிருன். எவ்வளவு தான் இந்தப்பற்றுக்களில மனிதன் உறுதியாக இருநதாலும் கூட, தன் வாழ்க்கையை அது பாதிக்கினற நிலைக்கு வரும்பொழுது, தான் கொணடுள்ள உறுதியில் அவன் இறுதிவரை நிலைப்பதில்லை. காரணம் இந்தப் பற்றுக்கள மனித வாழ்க்கை யில் இடைநிலையில் இருக்கின்ற பறறுக்கள். இடைநிலைப்பற்றுக் களிஞல் மனிதன் சோாவடையும் பொழுது, இடைநிலைப்பறறுக்களிலி ருநது முற்றிலும் விடுப்பட்டு, இறுதி நிலைப்பற்றுகிய "இறைவனின்" மேல் பற்று கொணடு இறைவனிடத்தில் மனிதன் சரணடைந்து விடுகிருன். சரணடைந்து தனனை ஒப்புக் கொடுத்த இந்த நிலையில் மனிதன் சந்தோஷமாக, சமாதானமாக அமைதியாக வாழும் மனப்போக்கு அவனுக்கு ஏற்படுகிறது.

## இறைப்பற்று ஏற்படும் சூழல்

மனிதன், இறுதி நிலையுடைய இறைவனின் மேல் பறறு கொள்ளும் போது ஒருவகைச் சூழலில் தன்னை ஒப்புக் கொடுக்கிருன். "பகுததறிவு **தாண்டிய நிலையில, பரவசச் சூழலில இறைச சக்தியுடைய ஒன்றிற்கு நமமை ஒப்புககொடுக்கும நிலைக்குத்தான பற்று றுதி என்று பெயர்"** இந்த வகை யானப் பற்றுறுதி **பகுத்தறிவிறகு முரணுனது அல்ல. பகுத்தறிவையும் தாண்டியது.** இப்படிப் பட்ட பரவசச் சுழலில் எந்தவிதமான நிபந்தனையும் இன்றி மனிதன் இறைவனிடம் சரண் புகுகிருன்.

## சரண் புகும் ஒப்பற்ற தன்மை :

இப்படிப்பட்ட திறநத மனத்து டன் சரண்புகுந்த நிலையில் மனிதனின் மனம் அமைதியாக, அகமபாவம் இல்லாத ஒரு நிலையை உண்டாக்கி விடுகிறது. நாம செயல்படுகினற

---

*திரு.* **அ. இராசராசன்,** II. M.A., (Phil)
*மதுரை - 625010*

---

எல்லாக் காரியங்களிலும் இறைவ னின் சிறப்பான ஆசீர்வாதம் தங்கி காரியங்கள் சிறப்பாகவும், வெற்றி கரமாகவும் நடைபெறுகின்றன. நாம் எதிர்பார்க்கின்ற எதிர்பார்ப்பு கள், எளிதாக மனநிம்மதியோடு நிறைவேறுகின்றன. சரணடைந்த பிறகு நம்முடைய உடலிலும், உள் ளத்திலும் ஒரு புது வித மாற்றம் உற்சாகத்துடன் எழும்புகின்றது. தெய்வீகத் தன்மையினை நாம் பெறு கிறோம். நம்முடைய ஆற்றலில், திறமையில் ஒரு புது திசையை நோக்கி மாறுதலடைகிறது. இவை இறைவனின் திருகரங்களால் அளிக் கப்படுகின்ற இறைச்சக்திகள். புது ஆக்கங்கள்.

## பற்றுறுதியின் சிறப்புக் கூறுகள் :

## (The Speicial Features of Faith)

பற்றுறுதியின் சிறப்புக்கூறுகளாக, சிந்தனையும், செயலும் இணைந்து ஒரு புதுச் சக்தி பிறக்கின்றது. சிந்தனை யும், செயலும் இணைந்து ஆக்கம் பெறும்போதுதான் பற்றுறுதியின் முழுத்திறனும் வெளிப்படுகிறது. **இறுதி நிலையுடைய அழியாத சக்தியான இறைவன் மேல் கொள்ளுகின்ற பற்று னது, மிகவும பணிவார்ந்த தன்மையினை யும், அதே சமயத்தில் மிகவும் துணிச்ச**

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ | பை |
|---|---|---|
| அஷ்டோதர சகஸ்ரநாம அர்ச்சனை | 1 | 00 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் . | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் . | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) . | 3 | 50 |
| குருபரமபரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி . | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம (தலபுராணம்) | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் (தொகுத்தவர்) தேசிகாச்சார்யா) .. | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத திருப்புகழ பகுதி I, பகுதி II. (Each) (தொகுத்தவர்) (திரு. கே. பாலசுநதர நாயககர்) . | 3 | 00 |
| சாவ தேவதா பூஜா விதானம – தி. தி தே – . | 0 | 70 |
| ஸுபரபாதம (பொருளுடன) ,, ... | 0 | 50 |
| ஸுபரபாதம ,, .. | 0 | 12 |
| செமபொருள (எஸ. கிருஷணவேணி அமமையார்) . | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கலயாணம (வண்ணப்படங்களுடன) | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிளளை .. | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) . | 4 | 00 |
| திருவாய்மொழி { கே. பாலசுநதர நாயககா } பாகம 1 | 7 | 50 |
| { விளககவுரையுடன } பாகம 2 .. | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாசசார்யா) . | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு எம வி ராமநாத கனபாடிகள் . | 0 | 20 |
| நித்யாநுஸநதானம் – தி. தி. தே – .. | 3 | 75 |
| **ஏழுமலை யாத்திரை (திரு. டி.கே. நாராயணன) (அச்சில்) ...** | 4 | 00 |
| **சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி.தி.தே - ..** | 8 | 00 |
| **சித்திர திருப்பாவை (வண்ணப படங்களுடன்) தி.தி.தே- .** | 8 | 25 |

### விற்பனைச் சலுகை விவரங்கள்

தி தி தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி தி. தேவஸ்தான கலவெட்டுத் தொகுதி 1 மறறும தொகுதி 5 ஆக மூனறு நூலகளுககு, செட்டாக வாங்குவோாககு, 12½% தள்ளுபடி வழஙகபபடும்.

'ஸ்ரீ அனனமாசசாரயா சஙகீததனமுலு' மறறும 'தாளளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமிததுவாஙகினால 12½% தள்ளுபடி வழங்கப்படும

ரூ. 100 அல்லது அதறகு மேறபட்டு விளங்கும விறபனைககு 12½%, ரூ. 500/- லிருந்து ரூ 1000/- வரை விளங்கும விறபனைககு 20%, ரூ. 1000/-க்கு மேல இருக்கும விற்பனைககு 30% எனறவாறு கமிஷன் **வழங்கப்படும. ரூ. 100/-ககு மேறபட்டு சரக்காணைகள் விளங்கினால், அவற்றிறகான தபால செலவினை தி. தி. தேஸ்வதானம ஏற்கும்.**

**ஆசிரியர்,**
தி. தி. தேவஸ்தானம்
**(தி. தி. தே. பிரஸ் காமபௌண்டு) திருப்பதி.**

லோடு காரியஙகளை எதிர்நோககுகிறை உந்துதலும ஏறபடுகிறது. மிகத்துணிச்சலான செயலகளை, துணிச்சலோடு எதிர்நோககவும், செயல்படவும் வாய்ப்பு ஏற்படுகிறது நாம் இறைவனிடம கொள்கின்ற பணிவு, காரியஙகளை துணிவான முறையில செயலபட வைக்கினறது நாம் செயலபடுகின்ற காரியஙகளில் இறைவனின முழு ஆசிர்வாதமும் நம்மோடு இருக்கின்றது. ஆகவே இறைவனமேல் கொண்ட ஒப்படைப்பு வாழ்ககையில் அஞ்சா நெஞ்சம் ஏற்படுத்துகின்றது.

## இறைவன் மேல் கொண்டுள்ள பற்றுறுதியினால் வாழ்க்கையில் ஏற்படும் மாறுதல்கள் :

இறுதி நிலையுடைய இறைசசக்தியின் மேல், சரணடைந்த பிறகு நம்மிடையே ஒரு தெய்வீக ஒளி பிறக்கிறது. நம்மையறியாமலே ஒரு புது உற்சாகத்தை நாம் பெறுகிறோம். பணிவார்ந்த தன்மையும், அமைதியான சூழலையும் நாம் பெற்றுவிடுகின்றோம். ஆகவே இந்த "ஒபபடைப்பில நம்முடைய முழு ஆள் தத்துவமும் மாறுதலடைகிறது. நம்முடைய செயலில, எணணததில, நடவடிக்கையில் மறறும் அனைத்திலும புதுவிதமான, உயர்ந்த, தெய்வீகத தனமையினை நாம எளிதில பெறறுவிடுகின்றோம்.

## முடிவுரை :

பல சிக்கல்களில் அகப்பட்டுத் தவிததுக் கொணடிருக்கின்ற மனிதனுக்கு, எல்லாம்வல்ல இறைவன், எப்போதும அவனுக்காக காத்துக் கொணடிருககிறார். மனிதன் தன்னுடைய அகம்பாவத்தினைத் துறந்து, இறைவனிடம் சரணடையும் பொழுது இறைவன மனிதனை அரவணைக்கினறார். ஆனால் மனிதன் இறைவனிடம் அசைக்கமுடியாத நம்பிக்கையினை,பற்றுறுதியினை, மகிழ்ச்சியில், துன்பத்தில் மற்றும் எல்லா எணண அலைகளிலும், அவன் விடாது கடைபிடிக்க வேண்டும். இக்கட்டுரையினை கீழ்க்காணும் குறளோடு முடித்தல் சிறப்பு என நினைக்கின்றேன்.

"வேணடுதல் வேண்டாமை இலான்
அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல."

★

# நம் பெருமை நமக்குத் தெரிவதில்லை

'நஜன்'

பாரத தேசத்தில அவ்வப்போது தோன்றின மகான்கள தவமும் ஆராய்ச்சியும செய்து பாரத தர்மததை வளர்த்து வந்திருககிறார்கள். அது மிகப்பழைய ஆலமரம். அதன் நிழலில் நாம் வாழ்கிறோம.

இம்மரத்தில் ஒரு கிளைபோல மற்றொருகிளை இல்லை. பார்ப்பதற்கு அதிக வேறுபாடுகள் இருக்கும். இருநதாலும் மரம் ஒன்றே. சத்தியமே அதன் உயிர்.

இந்த பாரத தர்மம செழிக்க ஏற்பட்டவை வேதங்கள்.

வேதங்கள் மற்ற மதங்களின் ஆதார நூல்களைப் போல மனிதனால் செய்யப்பட்டதில்லை. இறைவனே இயற்றியது என்ற பெருமையுடையதால் 'அபௌருஷம்' எனக கூறப்படுகிறது. மற்ற நூல்களில் காணாத ரகசியங்களை வேதங்களில் காணலாம். இந்திய பண்பாட்டு வரலாற்றில மட்டுமின்றி புராதன உலக பண்பாட்டிலும மிக மெச்சத்தகக கௌரவமான ஸ்தானத்தை நம வேதங்கள் பெற்றுள்ளன. உலகிற்கு முதன் முதலில் ஞான ஒளி அருளியவையும் இவைகளே

இந்தியாவின் தர்மம, இலக்கியம் கலை, கல்வி முதலியவைகளுக்கு மூல காரணமாக இருப்பவை வேதங்களே. அவ்வப்போது மகரிஷிகள் தங்கள் ஞானக்கண்ணால்அறிந்து அனுபவித்த அத்யாத்ம ஞானமே நமது வேதங்கள்.

மனுஸ்மிருதி கூறும தர்மங்கள் வேதங்களையே அடிப்படையாகக் கொண்டன. வேதம் எல்லா தர்மங்களுக்கும் மூலாதாரம்.

வேதங்களை ஆராய்ந்தால அவை பெரும்பாலும தார்மீக காரியங்களில் உபயோகப்படுபவை என்பது புலப்படும. இன்றைய இந்தியாவில் பிரபலமடைந்துள்ள அத்தனை மதங்களும் சம்பிரதாயங்களும் வேதத்திலிருந்து உண்டானவையே.

உலகமேதாவிகளில் தலை சிறந்து விளங்கியவரான மாக்ஸ்முல்லா என்ற ஜெர்மானியா "மற்ற மத நூலகள் செய்ய முடியாதப் பணியை செய்வதற்கே வேதங்கள் வாழ்கின்றன" என்று புகழ்ந்து பேசியிருக்கிறார்.

> நமது சநாதன தர்மங்களைப பற்றியும ஹிநது மத சிறப்பைப்பற்றியும பல ஆன்மிகப்புத்தகங்களை எழுதி வருபவா "நஜன" (எஸ். நடராஜன)
>
> நமது பெரியோர்கள நமக்கு விட்டுச சென்ற பிதுரார்ஜிதமான வேதம, ஆகமம, உபநிஷததுகள முதலியவை பற்றி "நம பெருமை நமககுத தெரிவதில்லை" என்ற வரிசையில எழுதுகிறா. அதில் முதல் கட்டுரை இது

பைபிளில் பழைய ஏறபாடு (Old Testament) போல வேதம் ஒரு குறிப்பிட்ட இனத்தின் சரித்திரத்தைச் சொல்ல வந்ததில்லை. குரான் போல் ஒரு தனிப்பட்ட மகானின் கருத்துகளை வெளியிடுவதல்ல.

மதம், விஞ்ஞானம், வேதாந்தம் இக, பரவாழ்க்கை, மனிதபண்பாடு இவைசம்பந்தப்பட்ட கருத்துகளுக்கு வேதநூல் ஒரு பொக்கிஷமாக விளங்குகிறது. கருத்துகளை வெளியிட வேதம் கடைபிடிக்கும் வழியே தனிச்சிறப்பு வாய்ந்தது. நவரஸங்களையும் அதில் காணலாம்.

இந்த வேதங்களை மூலமாகக் கொண்டு ஒவ்வொரு ஆசார்யாளும் ஒவ்வொரு சித்தாந்தத்தை வெளியிட்டிருக்கின்றனர். அவர்கள தங்கள் சித்தாந்தங்களுககு முக்கியத்துவம் கொடுத்து மூலவேதத்தை மாற்றிவிடவில்லை. மூலம் மொழிபெயர்க்கப படாமல் அப்படியே இருப்பதால் தான அந்தந்த ஆசார்ய புருஷருக் கேற்றபடி காலத்துக்கு காலம் புது அபிப்பிராயம சேர்ந்து வநதிருக்கிறது. இன்னொரு மதமாகப் போக வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

## காலம் கடந்தது

வேதம் அநாதியானது என்று நாம் கூறினாலும் மேல் நாட்டினர் வேத காலத்தை நிர்ணயிக்க முயன்றிருக்கிறார்கள். அவர்களுடைய கருத்துப்படி வேதங்களில் பழமையானது ரிக வேதம். அது தோன்றிய காலம் கி.மு. 1200 என்று நம்புகிறார்கள். மாக்ஸ் முல்லர் வேத காலத்தை சந்தஸ் காலம், மந்திர காலம், பிராஹ்மண காலம், சூத்ர காலம் என்று நான்காகப் பிரித்திருக்கிறார்.

இவர் கணக்குப்படி 3200 ஆண்டுகளுக்கு முந்தியது வேதகாலம். ஆனால் வேத ஸம்ஹிதைகளிலும் பிராஹ்மண கிரநதங்களிலும் பல குறிப்புகள் கிடைத்துள்ளன. இவைகளை ஆதாரமாகக் கொண்டு லோக மான்ய திலகர் வேத ஆரம்பகாலம் கி. மு. 4000 ஆண்டுகளுக்கு முன் நிர்ணயித்திருக்கிறார். மகாராஷ்டிரத்தின் புகழ் பெற்ற ஜோதிடரான ஸ்ரீபாலகிருஷ்ண தீக்ஷிதர் சதபதப்ரமாணங்களைக் கொண்டு ரிக்வேத காலம் 5500 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்கிறார். இவைகளிலிருந்து வேதம் மிகத்தொன்மையானது என்பது புலனாகிறது.

## நான்கு வேதங்கள்

துவாபரயுக முடிவில் கலியுக ஆரம பத்தில் வியாச மகரிஷி வேதத்தை நான்காகப் பிரித்தார். வேதம் முழு வதையும அத்யயனம் செய்வது முடி யாத காரியம. ஒருமனிதன் எவ்வளவு அத்யயனம் செயது சிரேயஸ்ஸை உண்டாககிக் கொளளக கூடுமோ அவ்வளவையும ஒரு பிரிவாகப் பிரித்து வைததார். இது தான 'சாகை' எனபபடும்.

வியாசருடைய சிஷயர் ஸுமந்தா பைலர், ஜைமினி, வைசமபாயனா எனனும் நால்வரும் ருக், யஜுர், சாம, அதாவண வேதங்களை அவர் மூலம தெரிநது கொண்டாாகள. ஒருவேத சாகையை முழுவதும் அத்யயனம செய்தவருக்கு ஒரு சுரோத்திரிய கிராமம் விடுவது அக்காலதது ராஜாக களின் வழக்கம. அந்த கிராமத திற்கு வரி கிடையாது. லௌகிகததில் பிரவிருத்தி வைத்துக் கொள்ளாமல் ஆத்மலாபமான காரியங்களையே செய்து கொண்டு வநத பரம்பரை நம் நாட்டில் தான இருநதிருக்கிறது.

ஆத்ம தததுவத்தை உபதேசிககும் சக்தி நம்முடைய தேசத்தில தான் இருக்கிறது.

தெரிநதவைகளை சொலவதறகு வநததல்ல வேதம. தெரியாதவை களைச் சொல்லவே ஏற்பட்டதாகும். தெரியாதது என்ன?

உலகததில தத்துவ விஷயததில இரணடு வித அபிப்பிராயஙகள் இருக் கினறன. நமககு தோனறுகிற பொருள எலலாம் ஒரு பொருளா வெவ்வேறு பொருளா எனற சந்தேகம இருக்கிறது. விக்ஞானத் தில் ஆரம்பத்தில பாாத்தால் உல கத்தில பொருள்கள வெவ்வேறு என்று நினைத்தாாகள், பின் எல்லா வற்றிற்கும் மூலமாக 72 பொருள் கள் (elements) என்று தீர்மானித் திருககிறார்கள் அந்த 72-ம் தங் களுக்குள ஒனறுக்கொன்று சேருவ தால் பல பொருளகள் உணடாகிற தெனறு ஆராய்நது கொணடே போனால இந்த 72 பொருள்களின் மூலம ஒரு பொருளே தான் என பதை அறிநது கொளவார்கள்.

ஆத்ம தத்துவத்தையே விசாரிபபவா கள் எல்லாம் அறிவினால் ஏற் பட்டவை எனறு சொல்லுவார்கள்.

வேதம நித்தியமானது. அதை திவய திருஷ்டியுளள முனிவர்கள் அறிந்து நமக்குச் சொன்னாாகள எதை ருசுவினால நிரூபிக்க முடி யாதோ எஙகே புத்தி எட்ட வில்லையோ அதற்காகத்தான் வேதம் ஏற்படடிருக்கிறது. இந்திரியங் களுக்கு அகப்படாததை விளக்குவது.

## வேதங்களை ஏன் கற்க வேண்டும்?

பகவானை உணாவதற்கு (தனனைத் தானே உணாவதறகு) வேதம் கற்க வேண்டும். பல இரகசியங்களைக் கொணடிருப்பதால் இதறகு மறை என்றும் பெயா. இம்மறைகளை ஓதி உணாநதோர் பிருமம சாக்ஷாத் காரம் பெறுகினறனர். வேதத்தினால் அறியப்படுவது மெயப்பொருள். பரம்பொருளைப பேசுவதுதான் மறையின பெருமை.

கிருஷண பரமாத்மா ''வேதங்களை ஆககியவன நானே வேதஙகளை அறிந்தவனும் நானே'' என்று கீதை யில் குறிப்பிடுகிறார்.

வேதைஸச ஸாவைர ஹமேவ
வேதயோ
வேதாந்தகருத வேத விதேவ
சாஹம் ||

பகவானின் வாய மொழியாக மறைகளின் பெருமை பேசப்படுகிற இடம் இது. இறைவனே வேதம், வேதமே இறைவன்.

''வேதோ வேத விதவ் யஙகோ
வேதாங்கோ வேத வித''

எனபது விஷ்ணு சகஸ்ரநாம வாக்யம்

வேதங்களை அறிந்தவன்
வேதங்களால அறியப்பட்டவன்
வேதஙகளையே தன் அமசமாகக் கொண்டவன்
வேதங்களை ஆய்பவன்

எல்லாம் இறைவனே.

(36-ம் பக்கம் பார்க்க)

திருமலை பிரமமோறசவததினபோது ஊஞ்சல் சேவை அலஙகாரம.



# திருவாய்மொழியும் சரணாகதியும் ★ ★ ★

கலியுகத்தில் பகவானை அடைவது மிகவும் சுலபம் மற்ற மூன்று யுகங களிலும் கடுந்தவத்தினாலும் யோகத் தினாலும் யாகங்களினாலும் அடைய முடியாத அந்த பகவானை இந்த யுகத்தில் அந்த ஸர்வோததமனை சரணாகதி செய்வதினாலேயே அடைந்துவிடலாம். நம்மாழ்வார் பகவானை ஜீவன எபபடி சரணடை வது எனபதை ஆயிரம் பாசுரங களால் அழகாக படிப்படியாக எடுத்துக கூறியுள்ளார். இதையே பல நூற்றாண்டுகட்கு பின்பு அவ தரித்த இராமானுசா "ஓம நமோ நாராயணாய நம" எனனும் திருவஷ்டாக்ஷ மநதரத்தையும் "ஸ்ரீமந நாராயண சரணௌ சரணம ப்ரபதயே, ஸ்ரீமதே நாராயணாய நம." எனனும் தவயத்தையும் கூறி பகவானை சரண் அடைநதுவிடலாம என உபதேசித தாா. இதையே தேசிகரும் தன ரகசியத்ரய சாரததிலும் கூறியுள் ளார். தேசிகர் பகவானை அடைவதற்கு விவேக, நிர்வேத, விரக்தி, பீதி, ப்ரஸாதன, உத்க்ரமண, அர்ச்சிராத, திவ்யதேச, பிராப்தி பர்வம என்ற ஒன்பது படிகளை கூறியுள் ளாா.

ஸ்ரீ கிருஷ்ணபகவான "ஸர்வ தாமாந பரிதயஜ்ய மாமேகம சரணம் வ்ரஜ .." என தனனிடம் ஜீவன்கள சரணடைந்து புணயம் பாபம எல்லாவறறையும் தனக்கே அர்ப் பணிக்குமாறு அருச்சுனனுக்கு சரணாகதியின் மகாத்மியத்தை உப தேசித்ததை நம்மாழ்வாா திருவாய மொழியில் அழகாக எடுத்துக் கூறியுள்ளார். நம்மாழ்வார் திருவாய மொழியில் ஜீவாத்மாவை பெணணாகவும் பரமாதமாவை ஆணாகவும உவமைப் படுத்தி தன்னை அந்தப் பெண் நிலையில் வைத்து, தன் ஆசாரியனை தாயாக்கி தனக்கு நாயகனான பகவானிடத்தில உளள ப்ரேமையை



நம்மாழவாா

விளக்கி, அவளும் தன் ஸ்தானத்தில் உறுதியாக நிறக அதைக் கண்ட ஆசாரியனான தாய பகவானிடததில் தன் பெணணின் நிலையை எடுத்துக் கூறுவதுபோல் பாடியுள்ளாா. தாய எப்படி தன் பெணணை அவள் நாயகனிடத்தில சோக்கினறாளோ அவ் வாறே ஆசாரியனும் தனனை ஆச்ர யித்த ஜீவனை பகவானிடததில் சேர்க கின்றார்.

சரணாகதனான நாம யாரை ஆசர யிக்கின்றோமோ அவாககு அதற்குரிய உன்னத தன்மை வேணடும். எந நிலையிலும தன்னை ஆச்ரயித்தவரை காக்கின்ற உறுதி வேணடும். இராமன சேதுபந்தனம் கட்டுகின்ற தருணத தில் சமுத்திர ராஜனை சரணடைந்தது பலனளிக்கவில்லை. ஏனென்றால யாருககு வலிமை அதிகமோ அவரிடத்தில எளியவர் சரண அடைய வேண்டும். ஆனால இங்கு நிலைமை மாறிவிட்டபடியால சரணாகதி தோல்வி அடைநதது. ஆகவே நம மாழ்வாா முதலில தாம சரணடையப் போகின்றவரின் உயர்வை முதல பத்து முதற்பாட்டிலேயே 'உயர்வற வுயர் நலமுடையவன், மயக்கமில் லாத அறிவை அருள்கின்றவனை, அமரர்களின அதிபதியான அவன் எல்லோருடைய துயரையும துடைக கின்ற ஒளிமிக்க அடிகளை உடையவன் எவனோ அப்பேர்பட்டவனின் அடிகளை தொழுகின்றேன். ப்ரபத்தி பணணிக் கொள்கிறேன்' என்று கூறுகின் றாா. மேலும இநதப் பத்து பாசுரத் திலும் அவனுடைய இனிய பணபு களையும் வலிமையையும் கூறி அவனை அவரவர் தத்தம் வழிகளில் அடையக் கூடிய சுலபன் என்றும், எங்கும் வ்யாபித்துள்ள அவன் தன்மையை யும் இலன எனில இருககின்றவனும, இருக்கினறான எனில் இலன என்று இருக்கும் தன்மையையும், சுடர் மிகுந்த அவன் எங்கும பரந்துள் ளான் எனறும் அவன பண்பைக் கூறு கின்றார்.

இப்படிப்பட்ட பரத்வத்தில் ஸகலரும ப்ரபத்தி பணணி தான் மட்டும் அல்லாது எல்லோரும உஜஜீவியுங் கோள என்று வேண்டுகோள் விடுக கின்றார். "அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர், செற்றது மனனுறில் அற்றிறை பற்றே" என்று கூறி ஈசனும் பற்றிலன், பற்றில்லாமல் முற்றவும் நின்றனன். அளவில்லா சம்பத்தையுடைய அவன் எதனுள் ளும் அடங்குவதில்லை. ஆகையால் யாக்கை விடும்பொழுது எல்லாம் அவனிடத்தில் சேருவதால் வணபுகழ் நாரணனின் திண்மையான கழலடி களை சேருங்கோள். ஸர்வேஸ்வரனை அதி நீசனான சேதநன் முறைப்படி ஆஸ்ரயித்தால் அடியார்களிடத்தில் மிகுந்த ஸௌலப்ய குணத்தோடு அவன் அருட்கடாட்சம் புரிவதையும் எடுத்துக் கூறுகினறார்.

**திரு. பா. வைஜயந்தி, பி.ஏ., சென்னை.**




## ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

## ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

தி. தி. தேவஸ்தானம ஆந்திர ஆஸ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சநதிரமௌளீ-ஸ்வர சுவாமி கோயில |
|---|---|---|---|
| | | ரூ | ரூ |
| அாசசனே | டிககெட ஒனறு | 2-00 | 1-00 |
| ஹாரததி | ,, | 0-50 | 0-50 |
| சகஸரநாம அாச்சனே | ,, | 5-50 | 5-00 |
| தோமாலநதார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வாத்தனு (உடைப்பது) டிககெட் ஒன்று | | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அமமை யாா கோயில | ஸ்ரீ பாாவதி அமமை யார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனே | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) டிக்கெட் ஒன்று | | 0-25 | 0-25 |

| நைவேத்தியஙகள | | ரூ |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொஙகல | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திறகும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுககு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

பகவானே சுலபமாக அடையத தன்னைப் பிராட்டியாகக் கொணடு பகவானிடத்து ''அஞ்சிறைய மட நாராயளியத்தாய் நீயும் நின் அஞ்சிறைய சேவலும் யாவாவென்றனக் கருளி'' என்று தனக்காக இரங்கி அவற்றை தூது விடுககின்ருர் இமையோர் பலரும முனிவரும நினேந்து நைநது கரைநது உருகிய வாறு தானும் உருகி 'புனேந்த கணணி நீாசாநதம புகையோடேந்தி' தொழுதால் எல்லாப் பொருள்களுக்கும் வித்தான அவன பெருமையை அளவிடமுடியாததே. ஆழவாருடைய இத்தகைய விஸ்லேக்ஷ குணத்தால அதை ஸஹிககமாட்டாமல் ஈஸ்வரன் தன்னுடைய ஸீல குணத்தால் சேர்த்துக் கொண்டதால் இததகைய குணமுடையவன ஈஸ்வரன் என்று அறியாத மற்றவர்க்கும் பகவானின ஸீல குணவிசேஷ பயனே எடுத்துக் கூறி எல்லா ஆதமாக்களும் நரகத்தையடைவது அநயாயமென்று ஈஸவரன துராதயனன்று எனறு உணர்ந்து மற்ற ஜீவன்களேயும ஈசனேப்பாடி அவன நாமம் கூறி, தணதுழாய் மாலே அணிநதவனுககுரிய பணிகள பல செயது, வணங்கி வழிபட்டு அதனுல வழிநின்ற வல்வினேகளே மாள்வித்து அழிவில்லாத இடததையும அடையுமாறு வழிவகுககின்ருர்.

ஸ்வராத்யனுன ஈஸ்வரனுடைய ஆராதனம பிறவித்துயரம் போக்கும ஸீகருபம. ஸீகருபமான ஆஸரயணமுடைய ஈஸ்வரன கரணத்ரயததாலுங்கிட்டமாட்டாத சேதநரிடத்தில ஆர்ஜ்வ குணததோட ஆபிநீத ஸமஸ்லேஷம பணணிக் கொணடிருபபான எனறு கூறி ஆழ்வார் 'ஓடும புளளேறி சூடும தணடுழாய்' மாாபனே பாடி அம்மானே ஆடுகின்ருர். ஆர்ஜ்வ குணுநுஸந்தானம் பணணின தம்மிடததில் ஈஸ்வரன் ஸாத்மிக ஸர்வாவயவஸம் ஸ்லேஷம் பணணின அநுபவ ரஸததை ''கேளிணே யொனறு மிலாதான் கிளரும் சுட

ரொளி மூர்ததி நாளணைநதொன்று மகலானெனனுடை நாவினுளானே'' என்று கூறி பின்னும தன் நாவினுள நின்று மலர்கின்ற ஞானக்கலைகளுக கெல்லாம் ஆவியும யாககையுமாக இருந்து தன் கணணினுள்ள நெற்றி யிலும் உசசியிலும் இருந்து தான் அவனுகி நின்ற நிலையை இதைவிட அழகாக கூறுவர் எவருள்ளார்

ஸர்வேஸ்வரன் சுடா விடுகின்ற ஆழியுடனும சஙகத்தோடும பதினனகு உலகஙகளும் தொழ "ஒரு மாணிக்குறளாகி நிமிர்ந்த'' அந்தக் கருமாணிக்கத்தை எம்பிரானை எந்தை தந்தை தநதைககும தம் பிரானை நெஞ்சால் கணடு நாரணன் என்ற சொல் கேட்டவுடன் கணபனி நாடி அல்லும பகலும நினைநது அவ னுடைய பரத்வஸௌலப்ய ஸௌந தர்யங்களை அனுபவித்து அவன் கை கூட வேணடுமென்று ஆசைப்பட்டு அஃதகப்படாமையால் ஆாததி மிகுநதுஆழ்வாரும் தாமும் பிராட்டி அவஸதையடைந்து ''தோறறேம மடநெஞ்சம் எம்பெருமான நாரணர்க்கு'' என்றும் தம் ஆற்ரு மையை யாரிடம் சொல்லிஅழுவோம் எனறு மனமுருகி "நொந்தாராக் காதல்நோய் மெல்லாவியுளளுலர்த்த நந்தா விளககமே'' என்று தன் ஆவி யும் நொந்தமையை கூறுகின்ருர்

ஸகல கல்யாண குண ஸம்ருத்தி ஹேதுவான பரத்வம அவதாரத் திலுண்டெனறு ப்ரேரப்தேஸம் பணணி ஈஸ்வரன் இவவாறு ஸாந நித்யம் பணணுகையில் ப்ரகாஸமாக பரதவத்தை அருளிச் செய்து தான் இந்த பகவதனுபவத்துக்கு ஸம்ஸாரி கள் ஸஹாயர் அன்று என்றுணர்நது இதற்கு ஸஹாயரான நித்யஸூரி களுடன் தான் எப்போது கூடப்போ கிறேும் என்று ப்ரார்த்திக்கின்ருர். ப்ரார்த்தனை ஸித்தியானவுடன் பிராட்டி போல மோஹித்திருக்கை யில் அந்த அவஸ்தையை (ஆசாரி யரான) தன் தாய் பகவானிடத்தில் இரக்கமான மனத்தோடு "எரியணை அரக்குமெழுகு மொக்கிமிவள்'' "சணணீர மிகு கூங்கி கை தொழு கினற அவன இராப்பகல உறங காமல தணதுழாயமாலபனை நினைந் துருகி ஆவியுலாநது வாடடமுறு வதை எடுத்துக் கூறுகின்ருள். இதற்கு ஈஸ்வரன ஸம்ஸலேஷக்கை யாலே அநத தாபம நிவர்த்தியாய் ஈஸ்வரனுடைய திவயபூஷண திவ்யா யுத திவ்யாவயவ ஸௌநதாயத்தை யும நித்ய ஸூரி ஸேவையையும் அனுஸநதிககின்ருர்.

ஆழவார் தான சிக்கென மணி வண்ணனை பிடித்தமையும் சரண் யனிடதது உறுதியாய் இருப்பதை யும் கூறி தன்னிடத்து ஈஸ்வரனை ப்ரீதிவைககுமாறு வேணடி அதனுல், ஸம்பநத ஸம்பநதிகளிடதது ப்ரியம உணடானது கணடு, ஸர்வேஸ வரனின் ஸம்பநதத்தால தம்முடைய ஏழு தலைமுறையோரும் கருதார்த தரானுரகளென்கிருர் இவ்வாறு ஸமஸாரிகளும தன்னிடம ஸம்பநதி களாகிஅவர்கடகுஅதனுல்கிடைக்கப் போகும மோக்ஷப்ரதத்தை உபதே சிததளுருகினருர். அதைக்கணடு ஆழவார்உம்முடையப்ரீதியினுலேயே மோக்ஷம் பராஸாதித்தருள வேணடு மெனறு கைஙகாய நிஷ்காமை பணணுகினருர். சிறப்பான வீடான சுவர்ககததையும், அதற்கு எதிரான நரகத்தையும் உணர்ந்து பிறப்பில் பல்பிறவிப்பெருமானை மறுபிறப்பில் லாமல் மகிழ்வடைகின்ருர். இத் தகைய கைஙகாயஸித்திக்குத் திருமா லிருஞ்சோலையையும் திருமலையையும் ஆஸ்ரயிககின்ருர். "கருமவன்பாசம் கழிந்துழனறுய்யவே — பெருமலை யெடுத்தான் பீடுறை கோயில்—வரு மழை தவழும மாலிருஞ்சோலை'' எனப்பாடி பரவசமாகி முடிச்சோதி யாயுனது முகமான சோதி மலர்ந்த தோ என்று வியப்படைகின்ருர். 'ஒழிவில்காலமெல்லாம்' உடனிருந்து குறையில்லாமல் திருவேங்கடத் தானுக்கு அடிமை செய்ய வேண்டும் என்று வேண்டி நிற்கின்ருர்.

ஆழ்வாரின் கைங்கர்யததால் உகநத ஸர்வேஸ்வரன் ஸர்வாத்ம தன்மையை காட்டவும் ஸர்வவித கைங்கர்யத்தையும் பணணுகைக்கு இச்சிக்கின்ருர். தன்னைப் போல் கைங்கர்யம் செய்யும மற்ற கைங் யகர்யபரானையும் பாராட்டி மற்ற வரை மணணுலகில் பிறந்து துன்புறு ஏர் என்று பயமுறுத்துகின்ருர். கைங்கர்யத்துக்குகந்தது பரவ்யூஹ விபவாந்தர்யங்களைக் காட்டிலும் அர்ச்சாவதாரமே சிறந்த தென்பதனை "கடல்வண்ணன் கணணன விண்ணவர் கருமாணிககமென' கண்ணனையும் "தேவ தேவனைத் தென்னிலங்கை யெரியெழச் செற்றவில்லியை பரவ நாசனை'' என்று இராமனையும் தொழுகினருர். இதற்கு இந்திரி யங்களைக கட்டுப் படுத்தி நெஞ்சம் பகவானைத தவிர வேறென்றிலும் இல்லாதிருத்தல் வேணடும் என்றும் உறுதியாய கூறுகின்ருர்.

சரணயனுன ஸர்வேஸ்வரன தவிர மற்றெவரும் இதற்கு தகுதியில்லை யென்றும், குணங்கொள் நிறைபுக ழுடைய மாதவனே ஐஸ்வர்யம் எல்லாம் தரக் கூடியவன் என்றும நிலைநாட்டுகின்ருர். தனக்கு முன்பு செய்த எல்லா அவதாரங்களையும் காட்டுமாறு பகவானை வேண்டிநிற்க பகவானும் அவ்வாறே காட்டியதால நறசாந்தம் பூசி பல பாசுரங்களில ஏத்திப் புகழ்கினருர். ஈஸ்வரன் மறைந்த பின்பு ஆழ்வார் பிராட்டி போல் அவஸதையடைநது மோஹித் திருப்பதை பொறுக்காமல் தாய் ஆழ்வாருக்காக சொல்லுகையில் அம்மோஹநதீரும்படி ஸர்வேஸ் வரன் நித்ய ஸூரிகளோட கடஸாந் நித்தியம் பணணுகையில் "உணடுமு மிழந்து கடந்து மிடந்து கிடந்தும் நின்றும்'' இருக்கின்ற இறைவனை மங்களாஸாஸனம் பண்ணுகின்ருர்.

அந்தர்த்யானமான பகவானை அல்லும் பகலும் நினைந்து கரைந்து தேஹத்தைவிட இச்சிக்கின்ருர். எங்கும் பகவத் விஷயத்தை

ஸ்மரித்துக கொணடு நாயகித் தன மையை அடைநது லோகத்தார் நிந்திககிறதையும் "கோணேகள செயது குதிரியாய மடலூராதுமே'' எனறுமடலூர நினைககின்ருா. இரவில் இதற்கு யததனம் செயய சூராயோத மாய் திருக்குறுஙகுடி நமபி பரத்ய ஷமாய் நிறக தத்ப்ரணவரான ஆழ் வாரைப் பாரதது தாய் விலக்கியும் அவனிடததில் தனமனம லயிபபதால் கோபிக்க வேணடாமெனகிருர். பகவத்லீலேகளே அநுசரிதது உனனே விட்டிருக்க மாட்டேன். உன்திருவடி களே சரணம அடைந்து "அநதமில் புகழாயடியேனே யகற்றேலே';என்று பரபத்தி பணணி நிற்கினருர். ஆராவ முதன போனற அர்ச்சாவதாரங் களில் பரவேசிக்கின்ருன். இதிலும் பலன் இலலாமையால் அர்ச்சாவதா ரத்தில இறங்கி பக்ஷிகளே தூது விடு கின்ருா.

மோஹம் நிவர்த்தியடையாமை யால் தன்பெண்ணின் நகைகள் நழுவி யதை "என் கறபுடையாட்டி யிழந் ததுகட்டே'' எனறு கூறுகின்ருர். திருக்கோளூா போகாவிடில் பரமபத நாதனுககு தூது விடுககின்ருா தூது விட்டும் வராமையால் பூலோக பரம பதமான திருவேஙகடமுடையானே யும் அலர்மேல் மஙகையும பரபத்தி செய்கின்ருா. திருத்தாயாா பெரிய பெருமாளேக குறித்து இநநாயகி (ஆழ்வாா) விஷயமாக "என் செய கின்ருயென் தாமரைக் கணண'' எனறு அவன சங்கல்பத்தை கேட் கினருா. தாய் தடுத்தாலும் வீரத தால் திருப்பதிககு போவேன் என்று போகின்ருா. அங்கு செனறு உம மையேஅடைவேன் என்று "தாமரைக கையாவோ உன்னே யெனறுகொல சோவதுவே'' என உருகுகின்ருா. ஈஸவரன் விசித்திர விபூதி காட்டியவுடன தனககும தன் அடியார்க்கும் ப்ரபநதம பணணி வைக்க வேணடுமென வைத்தோ மென்று சொல்ல அநத உபகாரத துக்கு ப்ரதியுபகாரம எது சொல்லப போகிறேம் என்று தடுமாறுகிருா நாயகி தனககு ஸமஸார ஸமபநதங கள ஒன்றுமிலலே என்று சொல்ல ஈஸவரன தான ஒருவனே மங்களா சாசனம பெறுவதறகுரியவன் என் றும, இப்படி பயப்படுகையில் ஈஸ வரன தமக்கு மஙகளாசாசன பரராய நித்தமுக்தரிருக்க முமுக்ஷுக களிருக்க நீ ஏன் பயப்படுகிறீரென்று சொல்லிப்பயநதீர்ததுககொள்கிருா. இந்த பயம் ஆழ்வாருக்கு எப்படி வநததென்று கேட்டு திருச்செங் குன்றூரில் பயம் நீங்குகினறது.

இநத அனுபவம மானஸாநுபவமே இதனுல் இந்திரியங்கள் ஈஸ்வரனே "காணவாராயென்று கணணும வாயும துவர்ந்து'' ப்ரத்யக்ஷமாகும படி வேணடுகின்றமையை கூறுகின ருா திருக்கடிதானத்தில் ஈஸ்வரன ஆழ்வாா மஹோரதமெல்லாம் தீரும படி ஸமலேஷிகக இது ஸவப்நமே எனறு மோகிக்க சங்கித்து பின்நீங்கி இது யதாாத்தமமென்று அறிகிருா "தென் திசைததல தம்புரைக குட்ட நாட்டுத் திருப்புலியூர் நின்ற மாயப் பிரான திருவருளா மிவாநோ பட்டதே'' என்றுமகிழகின்ருா. இவ்வாறு பகவானே அடைநதபின சேதனன் அவனுக்கு "குடிக்கிடந தாககு செய்து நின் தீர்த்த வடிமைககுறறவேல் செயது'' பணிநது நிறகவேணடிய தன்மையை கூறுகிருர்.

மோக்ஷமடைந்து ஆதமா காணும இன்பத்தை ஆழ்வார் "மற்றெுன றில்லே சுருஙகச் சொன்னேம்'' என்று கூறி இதைப்போல வாழ்வு யாது மிலலே. ஆகையால் "கணணனலலா லில்லே கணடீா சரண'' என்றும் மற்ற வா யாருக்கும சரணயடைக் கூடாது என்பதைக் கூறுகிருர். கணணன் கழலிணே நணணும மனமுடையீா எண்ணும் திருநாமம் திண்ணும் நாரணமே'' என்று உறுதி கூறு கிருர். ★

# அறிவிப்பு

திருமலேயில் காட்டேஜுகளுககாக முனபணம் செலுததி, தனி ஒதுககீடு (Reservation) செய்து கொளளும யாத்திரிகாகளின் நனமைக காக, மேலாணமை கீழ்வரும சலுகைகளே அளிதது ளளது

1 காடடேஜுகளுககாக தனி ஒதுககீடு செயது கொணட தேதி களுககுள் சமபந்தபபட்ட யாத்திரிகர்கள் நாட்கழிதது வநதா லும், மீதம் இருக்கும நாடகளுக்கு, அவாகள கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடிததுக கொணடு, மீதித தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிககப்படும.

2 காட்டேஜுகளுககாக முன பணம அனுபபியவாகள, தாங்கள கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களே, சூழ்நிலேக் காரணமாக மாற்றிக கொளள நினேத்தால், அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செயயப பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பந்தமாக விண்ணப்பித்துக் கொள்ள வேணடும்

3. காட்டேஜுகளுக்காக முன பணம செலுததியவர்கள் தஙகளுககு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத் திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எண் ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரண்டு நாட்களுககு முன்பேயே விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் **வேண்டும்.**

செயலாட்சித் தலேவர்,
**தி. தி. தேவஸதானம், திருப்பதி.**

# காஞ்சியில் திவ்ய தேசங்கள்

திரு. எஸ். வி. வைத்தியநாதன்
சென்னை - 28

நித்ய சூரிகளான ஆழவார்களால் பாடப்பெற்ற ஸ்ரீ வைணவ திவ்ய தேசங்கள் 108-ல், தொணடை நன்னாட்டில் மட்டும் 22 திவ்ய தேசங்கள் இருக்கின்றன. இதில் பிரதானப் பட்டது திருக்கச்சி. "புஷ்பேஷு ஜாதி, நாரீஷு ரமபா, நதிஷு கங்கா, நகரேஷு காஞ்சி" என்று புகழப் படுவது காஞ்சீபுரம். இப்பேற் பட்ட காஞ்சி மாநகரில் மட்டும 14 திவ்ய தேசங்கள் அமைந்திருக்கின்றன! இந்த திவ்ய தேசங்களை இப்பொழுது காணப் போகலாம் வாருங்கள்.

ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு முக்கியமான மூனறு க்ஷேத்திரங்கள் உணடு. அதை 'கோயில், திருமலை, பெருமாள் கோயில்' என்றழைப்பர். கோயில் எனபது ஸ்ரீரங்கம். திருமலை என்பது திருப்பதி. பெருமாள கோயில் காஞ்சீபுரமாகும். இப்படிப பட்ட, முத்தி தரும் நகரேழுள் முக்கியமாம் கச்சி தன்னுள் பிரதானமாய வீற்றிருக்கும் வரதராஜப்பெருமாள கோயிலிலிருந்து திவய தேச தரிசனத்தை துவங்குவோம்.

## திருக்கச்சி

மேற்கே பிரதான வாயிலோடு கூடிய பிரம்மாண்டமான திருக்கோயில் இது. கிழக்கிலும ஒரு கோயிலைக் காணலாம். இரண்டும் விஜய நகர அரசர் காலததுக கலைக் களஞ்சியங்கள். மொத்தத்தில் சுமார் 23 ஏக்கர் நிலபபரப்பில் அமைந துள்ள இக்கோயில் ஐந்து பிராகாரங்களைக் கொணடது. மேற்கு வாயிலிலிருந்து நுழைந்ததும் முதல் பிராகாரத்தில் நூற்றுக்கால் மணடபம் கலைச்சிறப்புகளோடு விளங்குகிறது.

இந்தக் குளத்திறகு வடக்கே உள்ள திருக்குளம் தான் அனநத சரஸ். இதில் இரணடு மண்டபங்களைக் காண லாம். ஒன்று வழக்கம்போல் மண்டபம். மற்றென்றின் அடியில் ஆதி அத்திகிரி வரதா சயனித்திருக்கிறார்! இவரை 42 ஆண்டுகளுக்கு ஒருமுறை வெளியே கொணர்ந்து, வசந்த மண்டபத்தில் 48 நாட்களுக்கு எழுந்தருளச் செய்து பக்த கோடிகளுக்கு தரிசனத்திற்காக வைத்திருப்பார்களாம்! மறுபடியும 48 நாட்கள ஆனபிறகு, அனந்த ஸரஸில் சயனிக்க வைத்துவிடுவாாகளாம்! இந்த முறையில் 1937-ல் பெருமாள் எழுந்தருளினராம்; அதற்குப் பிறகு இப்பொழுது, 1979-ம ஆணடு ஜுலை 2-ம் தேதி முதல் இந்த ஆதி அத்திகிரிவரதர் அனந்த ஸரஸ்ஸிலிருந்து எழுந்தருளி சேவை சாதித்திருக்கிறார். இன்று வாழக கொடுத்து வைத்த நாம் மிகவும் புணணியசாலிகள். இநத அபூர்வ தரிசனம் நமக்குக் கிடைததுள்ளது.

இனி இந்தக் குளததின் கிழக்குக் கரையில் சக்கரத்தாழ்வார் சன்னிதியிருக்கிறது. இது மிகவும சக்தி வாய்ந்த சனனதி. கிழக்குக கோபுர வாயிலுக்கு அருகில் பொற்றாமரைக் குளம் ஒன்று இருக்கிறது. இதில் தான் இந்த க்ஷேத்திரத்துத் தாயாரான பெருந்தேவித் தாயார் தோன்றினாளாம.

பெருமாள் வரதராஜர் சிறிய மலைக்குன்றின் மேல் நின்ற திருக்கோலத்தில் இருககிறார். இதற்கு 'ஹஸ்திகிரி' என்று பெயர். போகும் வழியில் வரதர் உற்சவரையும், குகை நரசிம்மர் சன்னிதியில் அரித்ரா தேவித் தாயாரோடு அழகிய சிங்கரைத் தரிசிக்கிறோம். பிறகு 24 படிக்கட்டுகளைத் தாண்டி ஹஸ்திகிரியின உச்சிக்கு வருகிறோம். இங்குதான வரதராஜா மேறகே நோக்கி காஞ்சி மாநகரையே கடாக்ஷித்துக் கொண்டு நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறார். பேரருளாளன் என்றும் அழைக்கப்படும் இவ்வெம்பெருமான் இங்கு எப்படி எழுந்தருளினர் என்று பிரம்மாணட புராணம் கூறுகிறது.

பிரம்மாவிற்கு ஒருசமயம் மனதில் குழபபம் வந்தபோது ஸ்ருஷ்டித தொழிலைச் சரிவர நடந்த முடியாமல் தவித்தார். கங்கைக் கரையில் தவம் செய்து தன்னைப் பரிசுத்தம் செய்து கொள்ள எத்தனித்தார். அப்போது அசரீரி ஒன்று, 1000 அச்வமேத யாகம் பண்ணினல் உள்ளம் சுத்த மாகும் என்றது. 1000 யாகங்களை ஒருவன் தன் வாழ்நாளில் செய்ய முடியாததாகையால, எந்த இடத்தில் ஒரு யாகம பண்ணினல் 1000 யாகம் பண்ணின பலன் கிடைக்குமோ, அந்த இடத்தைத் தேடிக் கொண்டு வந்தார். வரும்போது பகவானே அசரீரியாக சத்யவ்ரத க்ஷேத்ரமதான் ஒன்றுக்கு ஆயிரம் மடங்கு பலன் தரக்கூடியது என்று அருள, ப்ரம்மாவும் இங்கு வந்து யாகம் செய்ய ஆரம்பித்தார்.

பத்னியோடு சேர்ந்துதான் யாகம செய்ய வேண்டும் என்பது சாஸ்த்திரமாயிருந்தாலும் அந்தச் சமயம் சரஸவதி ப்ரணய கலகம் காரணமாக பிரிந்திருக்க, ப்ரம்மா சரஸ்வதியிடம் சென்று யாகததில் கலந்து கொள்ளுமாறு வேண்டினர். சரஸ்வதி வர மறுத்து விடுகிருள். ப்ரம்மா யாகம் செய்யத் தொடங்கிவிடுகிறர். கோப முற்ற நாமகள் யாகத்தைக் கலைக்க வேகவதி நதியாக பெருக் கெடுத்து

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேற்கொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள் போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உணவும்தான். இதை மனதிற்கொண்டுதான் தி.தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக இலவச சத்திரங்கள் பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும் கட்டியுள்ளது. இவை எவ்வகையில் உதவியாக அமைந்துள்ளன என்பது திருமலைக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நன்கு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள் பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள் தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும், மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும் சில சிறந்த உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பற்றிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின் பொருட்டு கீழே வழங்கப்பட்டுள்ளன.

## அன்னபூர்ணா ஹோட்டல்

*(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)*

சிற்றுண்டி நேரம். 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M to 3 P.M
6 P.M. to 10 P.M

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

(சனிக்கிழமைகளில் பாயசம் வழங்கப்படும்)

இவற்றைத்தவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானங்களும் இங்குக் கிடைக்கப் பெறலாம்.

## உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

*(தி தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் 6 A M to 10-00 P M.
சாப்பாடு நேரம் : 11 A M to 2-30 P.M
6 P M to 10-00 P M

தமிழ்நாடு சாப்பாடு ரூ 4-00
வடஇந்தியச் சாப்பாடு ரூ 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத் தவிர இனிப்பு வகைகளும், குளிர்பானங்களும் நியாயமான விலையில் இங்குக் கிடைக்கும்.

## காஃபி போர்டு

*(கல்யாண கட்டாவிற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் . 5 A M. to 10 P.M
மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர்பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் 5 A M. to 10 P.M

தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60

குளிர்பானங்களும் கிடைக்கும்.

## டீ போர்டு

*(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)*

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள்
(ஒரு பாக்கெட்) 75 காசு.

## தி தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் 11 A.M to 2 P.M.
7 P.M to 9 P.M

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில் கிடைக்கும்.

(சாப்பாட்டுக்கும், சிற்றுண்டிக்கும் 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தங்கள் தேவைக்கு தகவல் தருதல் அவசியம்)

## திருப்பதியில் தி தி. தேவஸ்தான உணவு விடுதி

*(இரண்டாவது புதிய சத்திரத்திற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் 5 A M. to 9-30 A.M.
2-30 P.M to 6 P.M
சாப்பாடு நேரம் . 10-30 A.M. to 2 P M.
6-30 P.M to 9 P M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுண்டி வகைகள், ஆம்ப்ரோ களுகோ பிஸ்கட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உண்டு.

தி. தி தேவஸ்தானத்தின் முதல் சத்திரத்தில் உள்ள மற்றொரு தேவஸ்தான உணவு விடுதியிலும் சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுண்டி வகைகள் குளிர் பானங்கள் போன்ற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

ஓடி வநதாள். பெருமாளை வேண்டிக கொண்டாா பரமமா. அவரும் நதி பெருகி வரும் வழியில் காலை நீட்டிப் படுததுக கொணடு வெள்ளப பெருக்கைத் தடுத்து விடுகிறுர். பரமமாவும் யாகத்தை செவ்வனே செயது முடிகக, இறுதியில ஹஸ்தி கிரியின்மேல் ஸ்ரீமந நாராயணன் வரதராஜராக உதபவிதது சேவை யளித்தார். பரம்மா வேண்டிக கொணடதன பேரில இன்றும் இதே இடத்தில் நின்று கொணடு பகதர் களுக்கு அனுகரஹம செய்து கொண டிருக்கிறுர் அத்திகிரி வரதர்.

காபபகருஹத்திறகு மேலேயிருக் கும விமானத்திற்குப் 'புண்ணிய கோடி விமானம' எனறு பெயர் பெருமாள் ப்ரம்மாவிற்கு மட்டு மின்றி, கஜேந்திரன, ப்ருஹஸ்பதி, நாரதர், ப்ருகு, அனந்தாழவான முதலியவர்களுக்கும் பரதயக்ஷமாகி அருள் புரிநதிருககிறுா. அது மட்டு மலல. தன் அர்ச்சா சமாதியைக கடநது திருக்கச்சி நமபிகளோடு வாயவிடடுப் பேசி விசிஷ்டாத்வைத சிததாநதத்தை உபதேசிதத மூர்த்தி யாவர் இந்தப் பேரருளாளன்!

இநதக கோயிலில் பெருநதேவித் தாயாா தனியாக பெரிய சனனதியில எழநதருளியிருக்கிறுர். மேலும், மலை யாள நாச்சியாா, வலமபுரி விநாயகா போனற சன்னிதிகளும காணலாம. இஙகு நாள் தோறும ஏதாவதொரு உறசவம் நடந்துகொணடே யிருக கும. முக்கியமாக 'காட்சி வரதர் கருட சேவை' வைகாசி மாதம நடை பெறும். ப்ரமமோற்சவத்தில்மூனறும் நாள் வரும நாட்டின பல பாகங் களிலிருந்தும இநத அறபுதக காட்சி யைக் காண பல்லாயிரக கணக்கான பகதர்கள வருவார்கள்.

பூதத் தாழவாரும நமமாழ்வாரும அத்திகிரி வரதனை மங்களா சாஸனம் செய்துள்ளனா. ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகனும் பெருமாளை அனுபவித் துள்ளார்.

## அஷ்ட புஜம்

காஞ்சியில் இருக்கும் ஒர் அபூர்வ மான கோயில இது இஙகு ஆதி கேசவ பெருமாள் எட்டு திருக்கரங் களோடு சகராகருதி விமானத்தினடி யில மேறகே நோக்கி நின்ற திருக கோலததில் சேவை சாதிப்பது அபூாவமான கோலம் சங்கம், சக்ரம, கததி, பதமம, கதை, அமபு, வில், கேடயம இவற்றை எட்டுக் கைகளில் ஏநதிக்கொணடு காட்சி தருகிறுா. பெருமாளின இநதக கோலம் காரணமாக இக்கோயில் "அஷ்டபுஜம்" என்றே வழங்கப படுகிறது.

இக்கோலததில் இங்கு ஏழந்தருளு வதறகுக் காரணம ஒரு வரலாறு உளது. ஒரு சமயம் ப்ரமமா காஞ்சி யில் யாகம செயதபோது அசுராகள் யாகத்தைக கொடுகக முனைந்தனா மஹாவிஷ்ணு நரசிமம மூாததியாய வர, அவர்கள் ஓடி ஒளிந்தனா. ஆனாலும் சிவனிடம போய் தங் களுக்கு உதவி செயய வேண்டினா. யார் எதைக கேட்டாலும் கொடுக கும கருணாமூர்ததி, அசுரர்களுககும் இரஙகி, எட்டுக் காலகள கொணட 'சரபம' என்ற விலங்காக வந்தாா. உடனே பரம்மா மஹாவிஷ்ணுவை பரார்ததிக்க அவர், எட்டுக் கால் கள் கொணட பராணியை அடக்க எட்டுக கைகளோடு தோன்றினா. அநதப் பெருமாள்தான் இந்தக கோயிலில் உறையும பெருமாள் என் கிறது தலபுராணம்.

இவா கஜேநதிரனுக்கும ப்ரதயக்ஷ மாகியிருபபதால் இஙகுள்ள புஷ் கரணிககு கஜேந்திர புஷ்கரணி எனறு பெயா தாயாா திருநாமம அலர்மேல மங்கை நாச்சியார். இங்கு சிததிரை ரோஹிணியில் திரு அவதார உறசவமும, ஆடி மாதம் கஜேநதிர மோக்ஷ உற்சவமும கொணடாடப்படுகின்றன.

இந்தப் பெருமாளை பேயாழ்வார் "தொட்ட படையெட்டும் தோலாத வென்றியான் அட்ட புயகரத் தான்" எனறும், திருமஙகையாழ்வாா "அட்ட புயகரததான என்றே" என்றும் மஙகளா சாஸனம செய் துள்ளனா.

இதோடு மட்டும இலலை. இந்தக கோயிலில் மற்றொரு அபூாவமான சன்னிதியும காண வேணடிய ஒன்று. அதுதான் வராகஸ்வாமி சன்னிதி வராக முகததோடு, எங்கும் காணக கிடைககாத அறபுத ஸ்வ-ருபத்தோடு காட்சியளிக்கிறுர் வலது காலை பூமி யில ஊன்றி இடது காலை படமெடுக கும் இரணடு சர்பஙகளின்மீது வைத்து பூதேவியை இடது தொடை யில அமாத்திக கொண்டு இடது கையால் இடையை அணைத்துக கொணடு வலது கையால் அவள பாதத்தைப் பிடித்துக் கொணடிருக் கும சேவை கணணை விடடகலாத அற்புதத் திருககோலம்

## திருத்தண்கா

காஞ்சியில் உள்ள முககியமான பகுதி இது இது 'தூப்புல்' என்றும வழஙகபபடுகிறது. இங்கு கோயில கொணடிருப்பவர் 'தீபப்பிரகாசர்' 'விளக்கொளிப் பெருமாள்' எனறு செந்தமிழில் அழைககபபடுகிறுர் ப்ரம்மா யாகம் செய்ய முற்பட்ட போது ப்ரணய கலகத்தால சரஸ்வதி கோபங்கொணடு யாகததுக்குப் பல விக்கினங்களைச் செய்கிறுள அதறகுத் தகுநதாற்போல் பெரு மாள் பல பல உருவங்களைக் கொண்டு அந்த இடையூறுகளை யெல்லாம் விலககுகிறுர். அபபோது சரஸ்வதி அந்த யாக சாலையே தெரியாத வண்ணம் மையிருட்டை ஏற்படுத்து கிறுள். எங்கும ஒரே இருட்டு. ப்ரம்மா தவித்துப போய் பெரு மாளை வேண்ட அவா "தீபப் ப்ரகாச ராய்" அங்கு தோனறுகிறுர். 'தீபம்' வந்ததும் இருட்டு ஓடிவிடுகிறது. அப்படித் தோன்றிய விளக்கொளிப் பெருமாள் தான இன்று நாம் காணும் திருமூர்த்தி. பகவான் மேறகே நோக்கி நின்ற கோலத்தில் இருக்கிறுர். தாயாருக்கு மரகத

வல்லி என்று திருநாமம். விமானத்திற்கு ஸ்ரீகர விமானம் என்று பெயா. சரஸ்வதிக்குப் ப்ரத்யக்ஷமாகியிருப்பதால் தீர்த்தம் அவள் பெயராலேயே அழைக்கப்படுகிறது.

இந்த தீபப்ரகாசரை நம்மாழ்வாா, திருமங்கையாழ்வாா இவாகள் பாடியுள்ளனர் தீபபரகாசா எழந்தருளியிருக்கும் இத்திவய தேசததில், ஞானப் ப்ரகாசராய் விளங்கிய ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் அவதரித்தது க்ஷேத்ர மகிமையை பன் மடங்கு அதிகரிதததது என்பது குறிப்பிடத் தக்கது.

## வேளுக்கை

பெருமாள் திருநாமம் அழகிய சிங்கர். தாயார் வேளுக்கை வல்லி. கதை விமானம். கிழககு நோக்கி நின்ற திருக்கோலம். ப்ருகு மஹரிஷிக்குப் ப்ரத்யக்ஷம. கனக ஸரஸ். பேயாழ்வார், 'நின்றிருந்த வேளுக்கை நீள் நகர் வாய்' என்றும், 'மன்னுமதிள் கசசி வேளுக்கையாளரியை'' என்று திருமஙகை மன்னனும் மங்களா சாஸனம் செயதுள்ளனர்.

## பாடகம்

இதைப் பாணடவ தூதா சன்னதி என்றும் அழைக்கிறார்கள். பெரிய காஞ்சியில் பாண்டவ பெருமாள் வீதியில் இருக்கும கோயில் இது. இஙகு எழுந்தருளியிருக்கும் பெருமாள் பாண்டவர்களுக்காக தூது சென்ற மாயக்காரக கண்ணன், 'பாணடவ தூதர்' என்ற பெயரோடு ருக்மிணி சத்ய பாமா சமேதராக, பத்ர விமானத்தினடியில வீற்றிருந்த திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். கிழக்கு நோககிஇருக்கிறது சன்னிதி. இவா ஹரித மஹரிஷிககு ப்ரத்யக்ஷமாகி அருள் புரிநதிருக்கிறார். தீர்த்தம் மத்ஸ்ய தீர்ததம்.

இந்தத் திவ்ய தேசத்து எமபெருமானை நானகு ஆழ்வார்கள் பாடியுள்ளனா ''பூம்பாடகதது இருந்தானை ஏத்தும் என நெஞ்சே'' என்று பூததாழ்வாரும், ''வாய்ந்த மறை பாடகம'' என்று பேயாழ்வாரும், 'குனறிருந்த மாட நீடு பாடகத்தும' என்று திருமழிசைப் பிரானும், ''பாடகத்துள எல்லா உலகும் வணஙக இருந்த அம்மான்'' என்று திருமங்கையாழ்வாரும் மங்களா சாஸனம் செய்துள்ளனா.

## திருநீரகம்

இது பெரிய காஞ்சிபுரததிலுள்ள உலகளந்த பெருமாள் கோயிலுக்கு உள்ளேயே உள்ள சன்னதி. ஜகதீஸ்

(31-ம் பக்கம் பார்கக)

# திருமலை ஒழுகு

வேங்கடத்துறைவார் திருவவதார தினத்திலே வைபவத்தாலே திவ்ய நகராபிவிருத்திக்குச சாதகர் அன்று எனகிற ஐதிஹ்யமானது ஸ்தலத்திலே ப்ரஸித்தமாய் இருந்தபடியாலே, இனி, திவ்யநகராபிவிருத்திக்கும், திருவேங்கடமுடையான் கனகலதாயோகத்திலே திருவவதரித்தாலும் சந்நிதியிலே திவ்யைச்வர்யம் உத்தரோத்தரமபிவ்ருத்தமாம் படிக்கும், (மேன்மேலும் வளரும் படிக்கும்) அப்போது உத்ஸவமூர்த்தியாயத் திருவாராதனம் கொண்டருளுகிற வேங்கடத்துறைவாரைக் கௌதுக பேரமாகவும், கௌதுகமான மலைகுனியநின்ற பெருமாளை உத்ஸவமூர்த்தியாயத் திருவாராதனம் கொணடருளும்படிக்கும், யந்த்ரோததாரண பூர்வகமாக ஆவாஹனம் பண்ணித் திருவாராதனம் கொணடருளும் படிககும் சங்கல்பித்தும,

செங்கனிவாயன் திருவம்சததிலே பிறந்த பரமபாகவதாகள திருக்கைகளாலே, திருவேஙகடமுடையான் நித்யதிருவாராதனம் கொண்டருளும் படிக்கும்,

**கோக்ஷீரைः ஹேமகும்பஸதைः**
**வலமீக விவரோதரம்|**
**அநுஸ்யூதாச்சிந்நதாரை ரபிஷேகம**
**பரசகரமே||**
**கரியமாணபிஷேகேண**
**வலமீகவிவராந்தராத|**
**ஆவிர்பபூவ பகவாந வாராஹவபுரீசவரः||**

என்கிறபடியே பூகோளவராஹத்திலே ஷஷ்டாத்யாயத்திலேயும் வராஹ பத்ம புராணங்களிலும் ப்ரஸித்தமாய் ஸ்வயம் வ்யக்தமாய் (தானே தோன்றிய) ஆவிர்ப்பவித்த ஞானப்பிரானும் திருவேங்கடமுடையானுக்கு முந்தின கல்பத்திலே திருவவதரித்ததாலும்,

**ரத்யாபலயந்தரே தேவம**
**பலிஹோமவிவர்ஜிதம்|**
**ஆராதயே தபரதாநம் ந சூர்யா**
**துத்ஸவாதிகம||**

என்றுஸ்ரீவைகாநஸசாஸ்த்திரத்திலே ஆநந்தஸம்ஹிதையிலே யிருககையாலே ஒரு க்ஷேத்ரத்திலே இரண்டு விக்ரஹங்களுக்கு ஸமப்ராதாந்யேந பூஜா மகோத்ஸவாதிகள் நிஷித்தமென்று அந்த ஞானப்பிரானுக்கு பலிபீடார்ச்சந நித்யஹோம மகோத்ஸவாதிகள் ஒன்றுமின்றிக்கே,

**மத்ஸ்தாபிதவராஹஸ்ய பூர்வம்**
**ஸயாத் பூஜநம் ஹரே!**
**தர்சனம் ஸனானதானத்யை**
**ரித்யுக்தோऽத ஸ்ரீயः பதி;|**
**ததாஸ்தவிதி வரம் தத்வா**
**காரயாமாஸ தத்ததா||**

என்று ப்ராஹ்மபுராணத்திலே அஷ்டமாத்யாயத்தி லிருந்தபடியே திருவேங்கடமுடையானுக்கு முன்பாகத் த்ரிஸந்த்யையிலும் திருவாராதனமும், அமுது செய்தருளுகையும் நடக்கும்படிக்கும், அவ்விடத்திலே உத்ஸவமூர்த்தியையும் ஏறியருளப் பணணுவித்துத் திருவாராதனம் கொண்டருளும்படிககும், அத்யயநோத்ஸவம் மாத்ரம் ஒரு நாளாகக் கொணடருளும்படிக்கும்,

**ஸ்ரீ வேங்கட வராஹாய ஸ்வாமி**
**புஷ்கரிணீ தடே|**
**ச்ரவணர்க்ஷே துலாமாஸே**
**பராதுராபூதாத்மநே நமः||**

என்கிறபடியே, அவர் திருநக்ஷத்ரமான ஐப்பசி மாதத்தில் ச்ரவண நக்ஷத்திரத்தில் ஸ்ரீவராக ஜயந்தியும் விசேஷோத்ஸவமாகக் கொண்டருளும்படிக்கும்,

**நித்யம பிலேந சாகத்ய தேவம் நதவா**
**நருபோத்தமः|**
**ராஜ்யம் சகார தர்மேண புஞ்ஜாநோ**
**போகமுத்தமம்||**

என்று பூகோளவராஹத்திலே தசமாதயாயததிலே சொல்லுகிறபடியே "தொண்டைமான சக்கரவர்த்தியானவன் கலியுகாதியிலே திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பூர்ணபக்திமானாய அவருடைய அனுக்ரஹத்தாலே ராஜ்யத்தைத் தாமமாகப் பரிபாலனம பண்ணிககொண்டு ஸமஸதபோகங்களையும் புஜிததுக்கொண்டு, நித்யமாகத் தன் அரண்மனைக்கும் திருமலைக்குமாக வரும்படி ஸ்வாமியானவர் ஒரு பிலத்தைக்காட்ட, அதில் பிரவேசித்து ஸந்நிதியிலே போய்ப் பெருமாளைச் சேவித்து வாரா நிற்க, இப்படியிருக்கிற நாளிலே,

**ஸ்ததே கதாசித் க்ஷிதிபே ஸ்ரீநிவாஸஸய**
**ஸந்நிதௌ|**
**சத்ரவசச பலோதரிகதா ருருது**
**ஸதஸய வை புரீம்||**

என்று ப்ராஹ்ம புராணத்திலே சொல்லுகிறபடியே ஸாமந்தராஜாக்களிவனை ஜயிக்கும்படி வந்து, பட்டணத்தைச் சூழ்ந்துகொள்ள அப்போது சக்ரவாத்தியும் அவர்களைத் துரத்திக்கொண்டுபோய் யுத்தம பண்ண, இப்படிப் பரஸ்பரம் யுத்தம் நடக்கச்செய்தே சக்ரவர்த்திக்குப் பலம் க்ஷயித்துப போய், (அழிநது போய்) அத்தாலே பராஜயப்பட்டு (தோல்வியடைந்து) ஸ்வதேசததிலே ஓடி வநது திருவேங்கடமுடையான் திருவடிகளிலே பக்தியாலே,

**ஸ்ரீந்ருஸிமஹம நமஸ்க்ருத்ய புநः**
**பராப்ய பிலோத்தமம்|**
**ஸ்ரீநிவாஸஸ்ய பௌள த்ரஷ்டும**
**ஸ்ரீபூமிஸஹிதம் ந்ருபः||**
**தம தருஷடவா ஸஹஸாऽऽயாநதம்**
**ஜுகூஹாதே தராரமே|**
**ப்ரணமந்த மவோசத்தம் கிமகாலே**
**ந்ருபாகதः||**

எனறு பூகோள வராஹத்திலே தசமாத்யாயத்திலே யிருக்கிறபடியே, பிலத்வாரத்தாலே பிரவேசித்து, அகாலத்திலே சந்நிதியிலே வந்து நிற்க அப்போது அந்தரங்க தசை

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூஜைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் நிகழ்ச்சி நிரல்கள் கீழ்வருமாறு மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன

**சனி, ஞாயிறு திங்கள், செவ்வாய்க் கிழமைகளில;**

**காலை**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
3-30 முதல 3-45 வரை : சுத்தி
3-45 முதல 4-30 வரை தோமாலா சேவை
4-30 முதல் 4-45 வரை பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல 5-30 வரை முதல் அர்ச்சனை அதாவது ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல 6-00 வரை முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வ தரிசனம
மதியம 12-00 முதல 1-00 வரை : சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) இரண்டாவது மணி

**மாலை**

1-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல 9-00 வரை . சுத்தி. இரவு கைங்கர்யம (ஏகாநதம்)
9-00 முதல நள்ளிரவு 12-00 வரை . ஸர்வ தரிசனம
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்
காலை 12-30க்கு : ஏகாந்த சேவை (தனி.)

**புதன் கிழமைகளில (ஸஹஸ்ர கலசாபிஷேகம நடைபெறுவதால்)**

**காலை**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம
3-30 முதல 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை தோமாலா சேவை (தனி )
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம.
4-45 முதல 5-30 வரை : முதல அர்ச்சனை, (ஸகஸ்ர நாம அர்ச்சனை) (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்து முறை, சேவைக்கான ஏற்பாடுகளை மேற்கொளல் முதலியன
6-00 முதல் 8-00 வரை ; ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம, சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாநதம) மணி
8-00 முதல இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம
இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம (ஏகாந்தம்)
9-00 முதல நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்
காலை 12-30க்கு ஏகாந்த சேவை. (தனி.)

**வியாழக்கிழமைகளில (திருப்பாவாடை உத்ஸவம் நடைபெறுவதால)**

**காலை**

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம
3-30 முதல் 3-45 வரை: சுத்தி
3-45 முதல் 4-30 வரை: தோமாலா சேவை (தனி )
4-30 முதல் 4-45 வரை: பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம
4-45 முதல 5-30 வரை. முதல அர்ச்சனை, ஸகஸ்ர நாம அர்ச்சனை (தனி.)
5-30 முதல் 6-00 வரை. முதல மணி, பலி சாத்து முறை
6-00 முதல் 8-00 வரை: சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் இரவு 8-00 வரை. ஸர்வ தரிசனம
இரவு 8-00 முதல இரவு 10-00 வரை: பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை. இரவு மணி ஏகாநதம.
இரவு 10-00 முதல நள்ளிரவு 12-00 வரை: பூலங்கி சேவை.
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி. ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30 க்கு: ஏகாநத சேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம் நடைபெறுவதால்)**

**காலை**

3-00 முதல 3-30 வரை: சுப்ரபாதம
3-30 முதல 5-00 வரை: சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல 7-00 வரை: அபிஷேகம.
7-00 முதல் 8-30 வரை: ஸமர்ப்பணை முதலியன.
8-30 முதல் 9-30 வரை: தோமாலா சேவை, அர்ச்சனை (தனி.)
9-30 முதல 10-00 வரை. 2வது மணி, பலி, சாத்து முறை
10-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம
இரவு 8-00 முதல் இரவு 9-00 வரை: சுத்தி, இரவு கைங்கர்யங்கள்.
இரவு 9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை; சுத்தி, ஏகாநத சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாநத சேவை (தனி)

குறிப்பு : சுப்ரபாதத்திற்கு ,ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். அர்ச்சனை, தோமாலா சேவை, அபிஷேகம் ஆகியவற்றிற்கு ரூ 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் அனுமதிக்கப்படமாட்டாது. ரூ. 4/-க்கு விற்கப்படும் சேவானந்தர டிக்கெட்டு வசதிகள் தற்போது அமுலில் இல்லை.

யிலே சேவித்துக் கொணடிருக்கிற ஸ்ரீ பூமிகள் ஆகிய இரணடு தேவிகளும் மறைந்து, அந்தஃ புரத்திலே பரபுருஷன வந்தானென்று சங்கோசப்படடு ஸ்ரீ தேவியானவர் தமககு நித்யவாசஸ்தலமான திருவேங்கடமுடையான திருமார்பிலே ஏறியருள, பூதேவியானவர் வெளிப்பட்டு, பூர்வ காலத்திலே ரங்கதாஸன் திருநந்தவன கைங்கர்யார்த்தமாக வெட்டின தாய, ஸமீபஸ்தமான கிணற்றிலே குதித்தாள்'' என்னும் கதையானது ஸ்தலத்திலேபண்டித பாமர சாதாரண்யேந அவிகீதமாக உண்டாகையாலும் அநதப் பூமிப்பிராட்டியை அர்ச்சா ரூபமாக ஏறியருளப் பண்ணுவித்து, அவர் சமீபத்திலே ஒரு தீர்த்தநயினாரையும் கூட எழுநதருளப்பண்ணி, அநதக் கிணறறிலே சோத்தியாக எழுந்தருளப் பணணுவித்து, அவர்களுக்கு நித்யமாகத் தளிகைகள் அமுது செய்யப் பணணும்படியும்,

''ஆளவநதாா ஒரு கால விசேஷத்திலே திருவேங்கட யாத்ரை செய்தருளி, மங்களாசாஸனம் செய்தருளின போது ஒருநாள் ப்ராத: காலத்திலே அழகப்பிரானுர் ஸ்நபநத்திற்கு (திருமஞ்சனத்திற்கு) உதவும்படி திருமலைநம்பி பாபவிநாசத்திலேயிருந்து திருமஞ்சனம் கொணடு வருகைக்கு வாஷோபாதியாலே கூடாமலிருக்க, அப்போது ஆளவந்தார் தாமே ரங்கதாஸன கைங்கர்யமான கிணற்றில் நின்றும் திருமஞ்சனம் எடுத்துச் சமர்ப்பித்துத திருமஞசனம் கொண்டருளப் பணணி, அந்தக் கிணற்றுக்கு ''அழகப் பிரானுர்'' என்று திருநாமம் சாத்தினுர்.'' என்னும் கதை ஸ்தலத்திலே பிரசித்தமாய் இருக்கையாலே, இத்தை எம்பெருமானுர் கேட்டருளி, நம்முடையார் எல்லோரும் அந்தக் கிணற்றை அழகப்பிரானுர் என்றே சொல்லக்கடவர்கள் எனறு கட்டளை பண்ணியும்,

**வநமத்யே தரோர்மூலே**
**ஸவாமிபுஷ்கரிணீ தடே|**
**திஷடநதம புண்டரீகாக்ஷம்**
**ஸ்ரீபூமிஸஹிதம் ஹரிம்'**
**சிஞ்சாவ் நக்ஷஸ்ய மூலே**
**து பராதுராவஜ்ஞநாதந:|**
**திந்தரிணீ வருக்ஷமூலஸதம்**
**வலமீகாஉதய பரம ஹரிம்|**

எனறு பூகோள வராஹத்திலும், வாமநத்திலும் இருந்தபடியே ஒரு கல்பவிசேஷத்திலே திருவேங்கடமுடையான்,

**உந்நித்ர திந்தரிணீச தவ**
**மேஷ்யத்யய மஹோாக:|**

எனறு புராணப் பிரசித்தியின்படியே திருவனந்தாழ்வானம் சமான திருப்புளியாழ்வார் கீழாக ஆவிர்ப்பவித்தருள, இப்படிச் சிலநாள் சென்ற பின்பு, ரங்கதாசன் என்பானொருபரமபாகவதன் தக்ஷிண தேசத்திலிருநது திருமலையிலே வந்து நித்யவாசம் பண்ணிக்கொண்டு எம்பெருமான் திருமேனிப் பரிவாலே ஒரு திருக்கோயில் கட்டவேண்டுமென்றெண்ணிச் சுவாமியின் பின்னேயிருக்கிற திந்த்ரிணீ வ்ருக்ஷமானது, (புளிய மரமானது) உறங்காப் புளியாய், ஒருகொம்பு தளிரும், ஒரு கொம்பு பழுமுமாய் இப்படி விசித்ராகராமாய் திருமேனிப் பரிவாலே குடை பிடிததாப் போலே தழைந்துகொண்டிருக்கிறதைக் கண்டு, என்செய்வோமென்று விசாரமிட்டிருகக, அன்று ராத்ரி, அந்தத் திந்த்ரிணீ வ்ருக்ஷமானது அவ்விடம் விட்டு ஸ்வாமிக்கு ஈசான்யபாகத்திலே ஒரு சரபாததூர (ஓர் அம்பு செல்லும் தூரமாக) விப்ரக்ருஷ்டமாய், எழுந்தருளியிருக்க, பினபு ரங்கதாசனுங் கண்டு ஆச்சரியப்பட்டு, இந்த வ்ருக்ஷம் திருவனந்தாழ்வான் அம்சமென்று ப்ரதிபத்தி பண்ணிக்கொண்டு,

**ஆகாசஸ்தம் ததா தருஷ்ட்வா**
**பீதநீலாக்ருதிம் சுபம்|**
**பார்ச்வஸ்த சங்கசக்ராப்யாம்**
**கதாஸிப்யாம் விராஜிதம்||**
**தேவஸ்ய பரிதோ பூமௌ**
**சிலாகுட்யம் ததாSகரோத்|**
**வாஸஸ்தாநம் சகாராசு தாருபிஃ**
**ஸுமநோஹரைஃ||**

என்று பூகோளவராஹத்தி லிருநதபடியே ஒரு திருக்கோயில கட்டினுனென்று புராணத்திலே ப்ரசிததியுணடானபடியாலும, ஒரோரு காலங்களிலே திருவேஙகட முடையானும், அந்தத திருப்புளியாழ்வார் கிழாக ஆஸதானமாய் இருந்து, ப்ரஹ்மாதி தேவதைகளுககுச் சேவை ப்ரஸாதித்தருளினுர் எனறு ஸ்தலத்திலே சிஷடகோஷ்டியிலே அவிகீத மான ஐதிஹ்யம் நடக்கையாய், இப்போது எல்லார்க்கும் ப்ரத்யக்ஷமாகவே வ்ருக்ஷச்சாயையானது வ்ருக்ஷமுள்ள விஸ்தாரம் மாத்திரம் காண்பித்துககொண்டு, சூர்யகதியாலே கிழக்கு மேற்காகப் போகாமையாலும், அந்த வ்ருக்ஷம் திருவனந்தாழ்வான் அமசமென்று நிச்சயிககையாலும், அலர்மேல்மங்கை நாய்ச்சியாா தாமே, அத்தாணிப் புளிக்கு நைருதி திக்பாகத்திலே ஸ்வாமிக்கு வலப்பார்சுவத்திலே பினபகதத்தில் அடைந்துகொண்டு நிற்கும் ஒரு சம்பக வ்ருக்ஷத்தின் கீழாய் இருநது பரஹ்மாதி தேவதைகளுக்குச் சேவை ப்ரசாதித்தாரென்னும் ஒரு ஐதிஹ்யம் உண்டாகையாலும், அந்த வ்ருக்ஷமும் சர்வ காலத்திலும் புஷ்பிதமாயும் பல்லவிதமாயும் இருக்கையாலும், இப்படி இதர வருக்ஷ விலக்ஷணமான இரணடு விருக்ஷத்தையும் ரங்கதாசன் திருநந்தவன கைங்கர்யம் பண்ணும் போது,

**தேவாஜ்ஞயயா வாஜயிதவா**
**தாவுடௌ தேவஸேவிதௌ|**
**திந்தரிணீப சமபகஞ் சோடௌ**
**பாலயேத,தௌ நகோத்தமௌ||**

என்றும,

**மம சாஸதாநிசாம் சிஞ்சாம**
**லக்ஷ்மயாஸ்தாநஞ்ச சம்பகம்|**

என்றும் பூகோளவராஹத்திலும, ப்ராஹ்ம புராணத்திலும் இருந்தபடியே திருவேங்கடமுடையான்தங்களிருவர்கும் ஆஸ்தான ஸ்தலமாயிருக்கிற இரண்டையும் சேதிக்க

(வெடட), வேணடாமெனறு நிய மிக்கை யாலும்,

ஆஸ்தாந சிஞ்சா தேவஸய ரமாயாச்
சமபகம தரும்|

என்று பூகோள வராஹத்திலே பரசிததமான இரணடு விருக்ஷத்துக் கும நித்யாராதனம் நடக்கும்படிக் கும, பூரவகாலத்திலே 'வீரநரஸிமஹ தேவ' னென்பான் ஒரு கஜபதியான வன் தீரத்தயாத்ராபரனுய் சேது தரிசனம பண்ணவேணுமென்று தக்ஷிணதேசததிலே புறப்பட்டு வாரா நிற்க, மாாக்கமத்யததிலே ஸ்ரீவேங் கடாசல மைபவத்தைக கேட்டுத் திருமலேயேறி ஸ்வாமி புஷ்கரிணீ ஸநாநத்தைப் பணணி ஞானப் பிரானேயும வேங்கடத்தரியையும் ஸேவித்துப் பின்பு, ஸேவாகரமத தின்படியே திருவேங்கடமுடையானே யும ஸேவித்து க்ஷேத்ரோபவாஸம முதலான நியமங்களோடே இருந்து, "கலெள வேங்கடநாயக" (கலியுகத் தில திருவேங்கடமுடையான் சிறநத வன) என்கிற பிரபாவததைககேட்டு, ஸ்வாமி திருவடிகளில் பகதி பரவச னுய், ஏதாகிலும ஸ்வாமி சந்நிதி யிலே ஒரு கைங்காயம பண்ணவேண்டு மென்றெண்ணி, வித்வத ஜனங்களேக் கேட்க,

பூஷ்ணுய கிரீடசச வாஹநாநாம
பரோ ரதஃ|
கோபுரஞ்ச விமநாநாம் ரதநாநாம
வஜ்ரமுத்தமம|
வாணுநாம பராஹ்மணஃ சரேஷ்டஃ
ஆசரமாணும து வை யதி||

எனறு ஆகம சாஸ்திரஙகளிலே யிருக் கிறதே, இதிலே உன மனதிற்கு ருசித்ததைப்பண்ணுய் என்ன, அவ னும கேட்டு ஸநதுஷ்டனுய் ஒரு திருக்கோபுரத்தைக் கட்டவேணடு மென்று நிச்சயித்து, அதற்குச் சாதககளான மனுஷ்யர்களேயும் த்ரவ்யங்களேயும் கொடுத்து நிாண யம பணணி, உத்தியோகம் பணணு வித்து, திருமலேயிழிந்து, காசி, காஞ்சியெனனும திவ்ய நகரம், ஸ்ரீரங்காதி க்ஷேத்திரங்கள் முதலான புணணிய க்ஷேத்திரஙகளிலே போய் ஸேவித்து, சேது தரிசனம் பணணி, மீளவும் திருமலேயேறி ஸ்வாமியைச் சேவித்துக் கட்டுகிற திருக்கோபுரத் யுங் கண்டு ஸநதுஷ்டனுய்த் தான தர்மாதிகளேயும் பண்ணிப் பூர்ண மனேரதனுய் இருக்க,அன்று ராத்திரி அந்தக் கஜபதி ஸ்வப்பநத்திலே ஒரு சர்ப்பம் முனனே வந்து நின்று, "வாராய், கஜபதியே, இந்தத் திருமலே என் சரீரமாய் இருக்கும; இதிலே நீ கோபுரத்தைக் கட்டு விகையாலே, என் தேகத்திலே, அதிக பாரம் உணடாய்ப் பீடையும் அதிகமாய இருக்கிறது; ஆகையாலே என ஸ்வாமியானவன ஸந்நிதியிலே போனுல் என் உடமபில் பீடை போம" என்று சொல்லிக கோயி லிலே புகுநது ஸந்நிதியிலே போய்த் திருவேங்கடமுடையான் வைகுண்ட ஹஸதத்திலே சுற்றிக்கொணடிருக்க, ராஜாவும் இப்படி ஸவபபநததைக் கணடு, ப்ரபுததனுய, பீதனுய,(விழித் தெழுநது, அச்ச முடையவனுய்,) விதவத் ஜனங்களோடே சொலலி, 'இந்த ஸ்வப்பநத்துக்குத் தாத்பரி யம் ஏதெ'ன்று கேட்க, அவர்களும், இந்தப் பர்வதம சேஷாசலமென்று வராஹ வாமனுதி புராணஙகளிலே ரிஷிகள சொனனுர்களே; இப்படிச் சேஷாகாரமான இந்தப் பர்வதத்தை வெட்டவும் இதன் மேலே கற்களேக குவிக்கவுமாகிற இந்த வ்யாபார மானது சேஷனுக்குப் 'பீடாவஹ மாய்ப் (நோயுணடாக்குவதாய) பார மாய் இருக்குமெனறு சொலல, பின்பு ராஜாவுங் கேட்டுப் பயப் பட்டுக் கோபுரத்தையும் அப்பால கட்டவேணடாவெனறு மொணணே யாய (மொட்டையாய்) நிறுததி, திருவேங்கடமுடையானுக்கு இவ வளவு மாத்திரம் கைங்கர்யமே திருவுள்ளத்துக்கு உகப்பாயிருந்த தென்று ஸநதுஷ்டனுய், சேஷனிடத திலே அபசாரப்பட்டோமே எனறு பயப்பட்டு, 'இதற்காகத்திருவேங்கட முடையானுக்கு ஒரு நாகாபரணத் தைப பணணுவித்துச் சநநிதியிலே ஸமர்பபித்து, இததைச் சாத்தியருள வேணடு' மெனற பின்பு, ஸநநிதிப பேரானவர்கள எங்கே சாத்துவோ மெனறு சநதேகிக்க, அப்போது திருவேங்கடமுடையானும் ஒரு பக்தன மேலே ஆவேசித்துப் "பூர்வ காலத்திலே சேஷனுககும் வாயுவுக் கும் ஸம்வாதம உண்டான போது,

ஏவம் வ்ருத்தே விவாதே து
ததராகாத்தரிரீச்வரஃ
கிமேததிதி தெள பருஷட்வா
சேஷேணேகதோऽதிவிஸதராத||
ப்ராஹோதவருததம் ததா சேஷம
பாவிகார்யம ஸ சிநதயன்|

என்று ப்ராஹம புராணத்தின்படியே நாம் வாயு பக்ஷபாதியாயிருக்க, அத தாலே சேஷனுககும துக்கமுண்டாய்,

சேஷோ கதமதஃ பசசாத் தஸமிநநேவ
நகோத்தமே|
வாயவயே ஸவாமிஸரஸஃ நாகதீர்தே
மநோரமே||
உத்தரே சிகரே புணயே ஸாநநிதயம்
ஜகதீபதேஃ|
தபஸதேபே மஹாகோரம திவயம
வர்ஷஸஹஸரகம்||

என்கிறபடியே இங்கே வநது நாக தீாத்தக் கரையிலேயிருந்து நம்மைக குறித்துத் தபஸ்ஸைப் பண்ணுகிருர்.

(தொடரும்)

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலேயில வருடத்தில மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெபபோறசவம், இப்பொழுது யாத்திரிகாகளின விருப்பத்தை நிறை வேறறும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்படடு வருகினறது அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்க லாம. பஙகேறகும் கிருஹஸ்தாக்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுரு வம பதித்த சுமாா 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒனறும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமனறி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திறகாக அனுமதிக்கப்படுவர்.

# கண்ணனும் குசேலனும்

திரு. எம். நாராயண வேலுபிள்ளை,
காஞ்சீபுரம்.

குசேலா, துவாரகாபுரி வாசனுகிய கணணனது பாலிய நணபரும் ஒரு சாலை மாணுக்கருமாவர். குசேலன் என்ருல் பொலிவில்லாத ஆடையைத் தரித்தோன் என்பது பொருள். அவர் கண்ணனைத் தரிசித்து பேறு பெற்ற வரலாற்றைக் காணபோம்.

முத்தி தரும் ஏழு நகரங்களுள் ஒன்ருயும், வட மதுரைக்கு அணித்தாயும் அவந்தி என்றெரு அணிநகர் உள்ளது. அந்நகர் விளஙக அநதணர் குலத்தில் குசேல முனிவர் தோன்றிஞர். அவரது இயற்பெயர் சுதாமா எனபது. அவர் பிரமசரியத்தை மேற்கொணடொழுகி, சாநதீப முனிவா பாற்சென்று, அவருக்குத் தொண்டு செய்து, கணணபிரானேடு தாமும் கல்வி பயின்ருர்; வேத முதலிய சகல கலைகளிலும் வல்லவராயினர். பினனர் மணப்பருவம் வந்தது. தமது ஆசிரியரின் அனுமதி பெற்றுச் சுசீலை என்னும் அம்மையை மணம் புரிந்தார். அது முதல தமது மனைவியோடு அனபுடனிருந்து இல்லறம் இனிது நடத்திஞர். அநநகரையடுத்த வனத்தில் சாந்திராயண முதலிய அரிய விரதங்களை அனுஷடித்து வநதாா காலக்கிரமத்தில் அவருக்கு இருபத்தேழு ஆண்மக்கள் பிறந்தனா. அதனுல் மிகவும்கொடிய வறுமை மேலிட்டது குசேலர் அவ வறுமையில் வாடினுலும் ஒருவரிடம சென்று யாசித்தல இழிதொழிலெனக் கருதி, அவ்வனத்தில் மிகவும முயன்று பெறும் மலைநெல்லை கொண்டு விருந்தினர்கது அளித்து, பிள்ளைகளும் தாமும் உணடு வந்தனா. எப்பொருளினும் பற்றின்றி நாராயணனையே மனதில் நாள் தோறும் சிந்தித்து வருவாராயினா.

இவ்வாறு நடைபெற்று வருகையில் இவரது அருநதவ மனைவியாம் கற்புக்கரசியாள தமது குழந்தைகள் பசிநோயாற படும் வருத்தம் கண்டு பொறுதவளாய் மனம் வருந்தி ஒரு நாள் கணவரை வணஙகி, "எனது தலைவரே! நமது குழநதைகள பசியிஞற் படும்பாட்டைத தாங்கள் நேரில் கண்டும அதற்கு ஒருவழியும் தேடாது இருப்பது ஏனே? மக்களது பசியைப் போக்கவேண்டியது தந்தையின் கடமையலலவா? ஆதலால் தங்களுடன் பள்ளியிற் பயின்று செல்வத்தில் மிகுந்து வாழும் கணணபிரானை அடைந்தாயினும் இககொடிய வறுமையை நீக்கிக கொள்ள முயலவேணடும்" என்று வேண்டிக் கொண்டாள். அது கேட்ட குசேலர் தம் மனைவிக்குச் செல்வ நிலையாமை முதலிய பலவித நியாயஙகளை எடுத்துக் கூறினர். என்ருலும், அச்செலவத்தை அடையவே முயல வேண்டி நேர்ந்தமையின், ஒரு நாள் தம் மனைவியை அழைத்து, 'பெண்ணே! கோபாலனிடத்திற சென்று இநநல் குரவைப் போககிக் கொள்ள எணணியுள்ளேன. கடவுள், ஆசிரியர், அரசா முதலியோரிடம் ஏதேனும் கையுறை கொண்டு போதலே விதியாகும. ஆகையால் அக்கருணைநிதியிடம் செல்லும்போது ஏதாவது கொணடு செல்லவேண்டும்' என்று கூறிஞர்.

உடனே அவரது இல்லக் கிழத்தியார் தமது எணணம நிறைவேறியது என்று களிப்படைந்து, நாள் தோறும் கிடைக்கும் தானியத்தில், அன்று தொடங்கித் தனககுரிய பாகத்தைச் சின்னுள் சேர்த்துவைததாா. அதை ஒருநாள் நறுமணம் கமழப பதமுற வறுதது, வெணமையாக முறிவின்றி அவலாக இடிததார். கிழிந்த கந்தையின் ஒரு நுனியை இரண்டு மூன்று மடிப்பாக மடித்து, அதில் தாம் அன்புடன் பதந்செய்த அவலை முடிந்து நாயகன் கையிற் கொடுத்து வணஙகி நினறனள்.

அம்மையாா கொடுத்த அவல் மூட்டையை முனிவர் எடுத்துக் கொணடு சில நாள் உணவின்றி விரைநது நடநது மேறகடற்கரையை அடைநதார். ஒரு படகோட்டியின் உதவி கொண்டு கடலைக் கடந்து துவாரகை சேர்ந்தார். படகில் செல்லுங்கால் இன்மொழிகள் பலகூறி அவன் உள்ளம் மகிழுமாறுசெய்தார். துவாரகை அரண்மனைவாயிலில் அரசா பலா காத்திருந்தனர். அங்கிருந்த வாயிற்காவலருக்குத் தமது வரவைத் தெரிவித்தார். அவருட் சிலர் மிகவும் இரக்கங் கொண்டு கண்ணணிடம் சென்று வணங்கி, குசேல முனிவரது வரவை விண்ணப்பித்தனர்.

அது கேட்ட கண்ணன் மன மகிழ்ந்து, 'அப்பெரியாரை அழைத்து வருக' என்று கட்டளையிட்டாா. உடனே காவலர்கள் முனிவரை அணுகி, கண்ணனது அன்பின் பெருக்கைத் தெரிவித்து, அவரை அந்தப் புரத்திறகு அழைத்துச் சென்ருர்கள். அங்கு அவர் வரவை எதிர்நோக்கியிருநத அக்கோபாலா எழுந்து எதிர் வநது பலமுறை வணங்கிஞர். பல வாறு புகழ்ந்து ஆசனத்து அமர்த்திஞர். உபசாரங்களோடு வழிபாடு செயதார். சிற்றுண்டிகளோடு திருவமுது செயவித்தார். பஞ்சணையிலே இருக்கச் செய்து அவரது பாதங்களை வருடிக்கொணடிருந்தார். அது சமயம் அவர், குசேலரது மனைவி மக்களது நலனகளையும், தாங்கள் கல்வி பயின்ற அநநாளில் குரு பணியில் ஒற்றுமை கொண்டிருந்த பெருமைகளையும் பற்றி உரையாடிக் கொண்டிருந்தனர்.

(24-ம் பக்கம் பார்க்க)

# இராமாயணத்தில் தசரதன்

இந்திய மண்ணிலே பிறந்த ஒவ்வொருவரும் போற்றிப் புகழத்தக்க ஒரு காவியம் உண்டு என்றால் அது இராமாயணம் ஆகும். வளர்ந்து வரும் நாகரிக உலகில் இராம காதையை கேட்டாலோ, படித்தாலோ இளைஞர் உலகம் நையாண்டி பண்ணுகிறது. அது ஏன்? இராம காதையை ஒரு காவிய சோலையாக நினைத்தால், அதன் உள்ளே சோலையின் காட்சியை காணுவது சற்றுக் கடினம் தான். அப்படி உள்ளே சென்று இராமனின் காட்சியை கண்டுவிட்டால் அங்கிருந்து வெளியே வருவது கடினம். பாவச்சுமையோடு இராமனைக்கண்டு தரிசித்தால் அந்த கருணாமூர்த்தி தனது கணடாட்சத்தினால் நமது பாவச்சுமையை நீக்கி ஆட்கொள்ளுவார். இதில் சந்தேகம் இல்லை. இதற்குச் சாட்சி,

1. தியாகராஜ சுவாமிகள்-இராமனை நேரில் பார்த்து ஒன்றியது.
2. பத்ராஜலம் ராமதாஸ் எனப்படும் பக்தன் கோபன்னா.

இராமனை நம்பியிருந்த இவர்கள், இராமனைத்தேடி செல்லவில்லை. இவர்களின் ஆற்றொன்னா அன்பொழுகும் நிலையைக் கண்டு இராமனே இவர்களைத் தேடி வந்தான்.

ஓர் உயர்ந்த அரசு உள்ளது என்று வைத்துக்கொள்வோம். அந்த அரசின் எதிர்கட்சி ஒரு வலுவுள்ள எதிர் கட்சி என்று சொன்னால் அதனால் கிட்டும் புகழ் எதிர்கட்சியோடு ஆளும் கட்சிக்குத்தான். அதை விட்டு தன்பால் குற்றத்தை கண்டு பிடித்த எதிர்கட்சியை சரிவர பார்க்கவில்லையானால் அந்தப் பழியும் ஆளும் கட்சிக்குத்தான். இதைத்தான் வள்ளுவன்கூட,

**இடிப்பாரை இல்லா ஏமரா மன்னன்**
**கெடுப்பாரிலானுங் கெடும்** (குறள்)

என்று சொன்னான். எதிர்ப்பிலதான் இனிய சாம்ராஜ்யத்தை படைத்தார் காந்தியடிகள். எதிர்ப்பிலதான் இரணியன் பரந்தாமனையடைந்தான். எதிர்ப்பிலதான் வாலி இராமனால் ஞானம் பெற்றான். எதிர்ப்பிலதான் இராவணன் இராமனைகண்டு வியந்தான். எதிர்ப்பிலதான் கண்ணனின் காணுதற்கரிய விஸ்வரூபத்தை கண்டான் துரியோதனன். அதைப்போல் எதிர்ப்பிலதான் இராமாயணம் இன்னும் பொலிவோடு திகழ்கிறது என்று சொன்னால் அது மிகையாகாது. இராமனை ஒருவன் கடவுளாக, தந்தையாக, அண்ணனாக, தமபியாக எப்படி வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளலாம். ஆனால் அத்தகைய முறைகளில் அவனமேல் செலுத்தும் அன்பின் மதிப்பில மட்டும் களங்கம் இல்லாமல் பார்த்து கொள்ளவேண்டும். நம்முடைய அன்பில் களங்கம் இல்லாதிருக்குமேயானால், நிச்சயமாக நம்மைப் பார்த்து "கலங்காதே! நான் இருக்கிறேன்" என்று ஆறுதல் சொல்வான். இராமகாதையை சற்று அனுபவித்துப் பார்க்க ஒருவன் சென்றுவிட்டால், அவன் தொடர்ந்து சென்று கொண்டே இருப்பான், தான் ஒரு தூய மனிதனாக மாறும் வரை.

இந்த அளவிலே இராமாயண புகழை நிறுத்தி, இனி பாத்திரங்களில் தசரதனைப்பற்றி ஆராய்வோம்.

தசம் என்றால் பத்து; ரதம் என்றால் தேர்.

பத்து திசைகளிலும் தேரைச் செலுத்தி வெற்றிவாகை சூடியதால் தசரதன் எனப்பட்டான். தசரதன் அயோத்தியை செவ்வனே அரசாட்சி புரிந்து வந்தான். "மன்னன் எவ்வழி-மக்கள் அவ்வழி" என்றாங்கு அயோத்தியில் எல்லோரும் எல்லாமும் பெற்றதாலே-அங்கு கொடுப்பாரும் இல்லையாம்; பெறுவாரும் இல்லையாம்.

**கல்லாது நிற்பார் பிறர் இன்மையின்**
**கல்வி முற்ற**
**வல்லாரும் இல்லை அவை வல்லார்**
**அல்லாரும் இல்லை**
**எல்லாரும் எல்லாப்பெருஞ்**
**செல்வமும் எய்தலாலே**
**இல்லாரும் இல்லை உடையார்களும்**
**இல்லை மாதோ"**

(கம்பர்)

இப்படிச் சகல செல்வம் பெற்ற தசரதன், செவ்வனே ஆட்சி செய்து வந்தான். ஆனால் தனக்கு "மக்கட்செல்வம்" இல்லையே என்ற கவலை தசரதனின் மனத்தில் வேரூன்ற ஆரம்பித்தது.

**அறுபதினாயிரம் ஆண்டும் மாண்டு உற**
**உறுபகை ஒடுக்கி, இவ்உலகை**
**ஓம்பினேனை**
**பிறிது ஒரு குறை இலை; என்பின்**
**வையகம**
**மறுகுவது என்பது ஓர் மறுபக்கம்**
**உண்டு அரோ"**

(பாலகாண்டம்-திருஅவதார படலம்) என்று வசிஷ்டனிடம் கூறுகிறான்.

கலைகோட்டு முனிவனை கொண்டு, புத்திரகாமேஷ்டி யாகம் இனிது நடைபெற்றுக் கொண்டிருந்தபொழுது யாகத்தினின்று ஒரு கனத்த பூதம் அமிர்த கலசத்துடன் தோன்றியது. முனிவன் ஏவல்படி தன்னுடைய மூன்று பத்தினிகளுக்கும் முறையே ஒவ்வொருவரின் கரத்தில் ஊற்றி பருகச் சொன்னான். எஞ்சிய அமிர்தத்தை இரண்டாம் முறையாக சுமித்திரைக்கு மட்டும் கொடுத்து பருகச் சொன்னான். அதன் விளைவாக மூன்று பத்தினிகளும் சூலடைந்தனர். கோசலைக்கு பேராழி அரிதுயிலும் பெருமாளே இராமனாகவும், சுமித்தி

**திரு. என். கே. ராமச்சந்திரன் B.Sc.,**
**பெரம்பலூர்.**

னைககு ஆதிசேடனே இலக்குவனு கவும், சககரமே சதருகனனுகவும, கைகேயிக்கு சஙகே பரதனுகவும் அவதரித்தனர்.

ஒருமனிதனுககு தான எதிர் பார்த்த அல்லது விரும்பிய காரியம் கைகூடுமானுல் அவன அடையும் மகிழ்சசிக்கு அளவே இல்லே. அதே வேளேயில் மகிழ்ச்சியின் உச்ச எல்லேக்குச் சென்று கொண்டிருப்பவன், தொடர்ந்து மிகப்பெரிய பள்ளம்உணடு என்பதைஅறியத்தான் வேண்டும். மகிழ்ச்சி ததும்பும காலத்தில் விஸ்வாமித்திர முனி தசரதனின் அவைக்கு வருகை புரிந்தார். தசரதன் தகுந்த மரியாதையோடு எதிர் கொண்டு அழைத்து வரவேற்ருன். முனிவரால் பலவாறு புகழப்பட்ட தசரதன், மேட்டை நோக்கி சென்ற வணடி எதிர்பாராத பள்ளத்தில் விழுவது போல பேரிடி போன்ற கூற்றைக் கேட்டான்.

அஃதாவது தான் வனத்துள் செய்யும் யாகத்திற்கு இடையூருக இருககின்ற அரக்கர்களே அழிக்க, நின்மகனில் இராமனே மட்டும் தருக என்று முனிவர் வேணடுகிருர்.

**தருவனத்துள்யான் இயற்றும் தல வேள்விக்கு**
**இடையூருத் தவம் செல்வோர்கள்**
**வெருவரச் சென்றடை காமவெகுளி யென**
**நிருதர் இடைவிலககா வண்ணம**
**செருமுகத்துக் காத்தி என நின் சிறுவர்**
**நால்வரினும கரிய செம்மல்**
**ஒருவனேத் தந்திடுகி என உயிர் இரக்கும்**
**கொடுங் கூற்றின் உளேயச சொன்னுன்.**

இதில் ஒரு உச்சக்கட்டம் என்ன வெனில், தசரதன் தன்னுடைய பிள்ளேகளில் இராமனிடம் மட்டும் அதிக பிரியமுள்ளவனுக இருந்தான். ஏன் உயிராகவே பாவித்து வந்தான். விஸ்வாமித்திர முனிவரோ இராமனே மட்டும் தருக என்று சொல்லுகிருர். அதனுல்தான் தசரதனுக்கு ஈட்டி பாய்ந்த உணர்வு ஏற்படுகிறது என்று கவிஞன் வர்ணித்து செல்லுவான்.

1) ஏன் விஸ்வாமித்ர முனி, வீரன் தசரதன் இருக்க, அவனது பிள்ளேகள் மற்றவர் இருக்க இராமனே மட்டும் தரும்படி கேட்கிருன்?
2) ஏன் தசரதன் இராமனே அளவு கடந்து நேசிக்கிருன்? இராமனே பிரியும் போது ஏன் தானும் பிரிந்தான்?

இந்த இரு விஞவையும் எட்டிய மட்டில் பார்த்தோமேயானுல் சில உண்மைகள் வெளியாகும்.

முதலாவது விஞவிற்குச் சற்றுப் பார்ப்போம்.

முக்காலமும் உணரும் ஆற்றல் முனிவருக்கு உண்டு என்பதை நாம் அறிவோம். தன்னுடைய தவத்தை மட்டும் காக்க, இராமனே விஸ்வாமித்திரமுனி அழைத்தான் என்ருல் அது ஒரு பெரிய காரியம்அல்ல.ஏனெனில் தவத்திற்குத் தடைசெய்யும் கொடிய அரக்கர்களே யான் ஒருவனே அழித்துத் தவத்தை காக்கிறேன் என்று வீறுகொண்டு எழுகிருன் தசரதன்.

**...''பனிநீர்க் கங்கை புடையூற்றும் சடையானும்**
**நான்முகனும் புரந்தரனும் புகுந்து செய்யும்**
**இடையூற்றுக்கு இடையூருய் யான் காப்பென்''**

ஆனுல் இராமனேயே தருக என்று கோபாக்கினியாக மாறுகின்ருன் முனிவன். இங்குச் சற்று சிந்தித்தால் விடை கிடைக்கும்: இராமனே—பரம் பொருள் என்று விஸ்வாமித்திர முனி அறிவான். இராமனின் கைவண்ணத்தால் தாடகை அழிந்து, வேள்வி காக்கப்படவேண்டும். அடுத்து இரண்டாவதாக இராமனின் கால் வண்ணத்தால் கல்லாகச் கிடக்கும் அகலிகையின்சாபம்நீக்கிஉயிர்ப்பிக்க வேண்டும். மூன்றுவதாக இராமன தன்னுடைய மனவண்ணத்திஞல் சிதையைக் கணடு மணக்கவேணடும். ஆக ஒரு பெண்ணே ஒழித்து ஒரு பெண்ணே உயிர்ப்பித்து ஒரு பெண ணிற்கு வாழ்வு கொடுககவேண்டும். இநத மூன்று நிகழ்ச்சிகளும் விஸ்வாமித்திர முனிவன் முன்னிலேயில் தான் நடைபெற்ருக வேண்டும். மேற்கண்ட நிகழ்ச்சிகளே தசரதன் முடிகக முடியாது. இந்த உண்மையை அறிந்து தான் வசிஷ்ட மகரிஷி தசரதனே நோக்கி'உன்மகன் இராமனே நோக்கி நற்பெயர்கள் வருங்காலத்து அதனேத் தடுப்பதோடு மட்டுமல்லாமல், ஏன் விஸ்வாமித்திர முனிவரின் கோபதிற்கும் ஆளாகிருய்'என்ற குறிப்புணர்த்திஞர். வசிஷ்ட மகரிஷியின் ஆசியால், முடிவில் இராமனேடு இலக்குவனேயும் சேர்ந்து விஸ்வாமித்திர முனிவனேடு அனுப்புகிருன் தசரதன். இந்த உணமையின் தத்துவங்களால் தான் விஸ்வாமிததிரமுனி இராமனே மட்டும் வேள்விகாக்க அழைத்தான் என்று கொள்ளலாம்.

இனி அடுத்து இராமனே அதிகம் நேசித்த தசரதன் ஏன் இராமன் பொருட்டு பிரிந்தான் என்பதனே நம் அறிவுக்கு எட்டிய மட்டில் பார்ப்போம்· ''ஊழிற்பெருவழியாவுள''... என்று கேட்பான் வள்ளுவன். இப்பொழுதும், அவனவன் நல்வினே தீவினேக்கேற்க பிறவியும, வாழ்க்கையின் அமைப்பும் அமையும். தசரதன் மக்கட்பேறு இல்லாத காலத்தில் வேட்டையாட சென்றபொழுது ஒரு நாளில் நடந்தநிகழ்ச்சியின் ஊழ்வினே தான் தொடர்ந்து வருகிறது என்று கொள்ளலாம். அந்தநிகழ்ச்சியாவது: வேட்டையாட சென்ற தசரதனுக்கு ஒரு குளததில் சளசளப்பு சத்தம் கேட்டது. அதாவது தசரதனுடைய மனம், குளத்தில் விலங்குதான் உள்ளது என்று எண்ணியது. ஆனுல்· குளத்தில் ஓர் இளேஞன், கண்ணில்லாதன் பெற்ருேர்க்காக தாகம் தணிக்கும் பொருட்டு நீர் மொண்டு

கொண்டிருநதான். இதனை அறியாத தசரதன் குளத்தின் அருகே சென்ருல், விலங்கு ஓடிவிடும் எனறு கருதி இருநத இடத்திலிருநதே அம்பை எய்திஞன. விலங்கின் ஒலிக்கு பதிலாக மானிடன் ஒலிகேட்டு தசரதன விரைநது ஓடிஞன் குளத்தை நோக்கி. ஊசலாடிக் கொண்டிருநத அந்த இளைஞனின் ஆவி தசரதனிடம் உண்மையை சொன்னவுடன் பிரிந்து போய விட்டது. இளைஞனின் பெற்ருேரிடம் தசரதன் தணணீர் கொணடு சென்று நடநததை சொல்லி மிகவும் வருந்திஞன். ஆஞல் கணணிழந்தும் ஒளி பெற்ற உணர்வு போன்ற மகனை பெற்ற அந்த பெரியோர், தங்களின மகன் மாண்டான், அதுவும் ஒரு அரசனின் அமபுக்கு இலக்காகி மாண டான் என்று அறிந்ததும் அவர்கள் அடைந்த புததிரசோகத்திறகு ஈடு கிடையாது. உடனே தசரதனை நோக்கி "உனக்கும், எங்களைப்போல வயது முதிர்நத காலத்தில் உன் அருமை மைநதஞல் உயிர் பிரியக் கடவது'' என்று சாபமிட்டு அவர் களும உயிரிழநத மைநதனை நோக்கிச் சென்றனா. அநத ஊழவினைதான் இப்பொழுது தசரதனை தொடர்நது வருகின்றது.இராமனைததான் அதிகம் நேசித்தான் தசரதன். இராமனை தன்னிடமிருந்து சற்றுநேரம் பிரிக்க முயல்பவர்களையும் கணடு வருநதிஞன். தன்னுடைய மனைவிகளில கைகேயிடம் அளவற்ற அன்பு கொணடதசரதன் அந்தக்கைகேயியே இராமனைக் காட்டுக்கு போகவும் தன் மகன் பரதன் நாடாள வேண்டும் என்று இருவரங்கள் மூலம் கேட்டவுடன் இருதலை கொள்ளி போல் மிகவும் வருநதிஞன் தசரதன

இராமனைத தன்னிடமிருநது பிரித்த கைகேயியை வெறுத்தான். அவளின் மகஞன பணபிலே உயர்ந்த பரதனை தன மகன் அல்ல எனறும் தான கைகேயின் முகத்தில் விழிபபது இனிப்பாவம் என்றும், பரதன தனக்கு இறுதிச் சடங்குகளை செய்யக் கூடாது எனறும் சொல்லி இறந்தான.

இந்த சின்ன எடுததுக்காட்டின் மூலம் நாம் அறிவது இராமஞகிய உயிர் தனனைவிட்டு கானகம போகும் போது தசரதன் மரணம் எய்திஞன். ஊழ்வினை தான்முநதிக கொணடது.

அநதத் தசரதனின் வீழ்சசிககு ஊழ்வினை வநது உறுத்துகிறது. தான் கொடுத்த இருவரங்களையும தசரதனின் இறுதி பயணத்திற்கு பயன்படுத்திஞள் கைகேயி. தசரதனின் வீழ்ச்சி கேட்டு(பரதன் மூலம்) காட்டிலிருந்த இராமன் அடைந்த துன்பத்திறகு அளவில்லை பண்பாளன் பரதன பட்ட துன்பததிறகும் அளவில்லை. தசரதனின் நண்பன் ஜடாயு அடைந்த துனபததிற்கு அளவில்லை

இத்தகைய ஓர் ஒப்பற்ற பாததிரம் இராம காதையில், படிபபோரை பரவசப்படுத்திக் கணணீர் குளத்தில் நிரப்பும் எனபதில் எள்ளளவும் ஐயம இல்லை ★

---

(21-ம் பக்கத் தொடர்ச்சி)

பின்னர் கண்ணபிரான் குசேலரை நோககி, "அன்புடையீர! எனக்கு என்ன சிற்றுண்டி கொணடு வந்தீர?' என்று கேட்டார். அவரது மனக குறிப்பை யுணாந்துகொணடு அவா வைத்திருந்த அவல் மூட்டையைப் பெறறு, அதை அவிழ்ததுப் பார்த்து ஒருபிடி அவலை யெடுதது நணபராகிய குசேலருககுப் பெருஞசெலவம உண டாகுமாறு உண்டாா. அனறிரவு அவரைப் பஞ்சணையில் துயிலச செய்தார்.

மறுநாட்காலையில், குசேலா, துயிலெழுந்து, வநதனை வழிபாடுகளை முடித்துக் கொணடு, அப்பரந்தாமனிடத்துத் தாம யாதொனறும வேண்டிககொளளாது பிரியா விடை பெறறுத் திரும்பிஞர். வழி நடந்து வரும்போதே தமது திருமேனியில ஓா அழகும், காதணியும், விலையுயர்ந்த ஆடையாபரணங்களும் தெய்வத் திருவருளால் விளஙகக் கணடு வியப்படைநதார். 'இது எம பெருமான் திருவருட் செயல போலும்' என அகமகிழநதாா. ஆங காஙகே அரசா முதலியோா எதிா கொண்டு வணங்கினா. ஒரு புதிய தேரின் மீதேறி விருதுகளோடு தம நகரையடைந்தார்

இதறகு முன்னரே அவ்விறைவன் அருளால் இல்லததில் எலலாச் செல்வங்களும அதிகரிககப் பெற்றுக் களிபபடைநது, கணவன் வரவை எதிாநோக்கி யிருக்கும மனைவியும, மக்களும, நகரத்தாரும் எதிர் கொணடு வணஙகினர். மங்கள வாழத்துக்களோடு குசேலர் தமது இலலமடைந்தார். பிறகு முனிவர் அஙகுநிறைநதுள்ளவளத்தினைககணடு இறைவனது அருள் திறததை வியநது புகழநது, அந்தச் செல்வங்களை நுகர்நது கொண்டிருந்தார்.

பிறகு ஒரு நாள் குசேல முனிவர் ஒரு தனியிடத்து இருந்து கொண்டு, 'தாம முன்செய்த தவத்திற்கு மாறுக இப்போது தம்மைப் பநதிதது நிறகும் இசசெல்வங்கள் நிலையில லாதன எனவும, இவற்றினிடதது வெறுப்படைந்தாலனறி அப்பரமனடியை அடயமுடியாதெனவும், அங்ஙனம பறறு நீஙகுவதற்கு அச கடவுளைத தியானித்தலே நன்னெறி' எனவும எணணித்துணிநதாா. அதன் படியே அபபரமனது வைபவங்களைப் பலவாறு பாடித துதிததார். அங்ஙனம் துதிககும் குசேலரின் அன்பிறகு இரங்கி இறைவன தரிசனம்தநதான். அவன் ஆணையினபடி முனிவரும சின்ஞள் உலகில் வாழ்நது இருநது, பினனர்த தேவாகள மலாமாரி பொழியத் திருவைகுணடம எய்தி, அவண திருமாலின் திவ்விய மஙகள உருவம் பெற்று விளங்கி யிருநதார்.

இக்கதையின் மூலம் கணணன கருணுமூர்த்தி என்பதும், குசேல முனிவர் வறுமையிற் செமமை கணட சீலர் என்பதும், சுசீலை கற்புக் கணிகலம் என்பதும் நன்கு புலஞகின் றன. ★

# கீதை காட்டும் நல்வழி



அத்தியாயம்–11

## விசுவரூப தரிசன யோகம்

**பகுதி — 4**

திரு. டி. கே நாராயணன், M.Sc.,
ஆசிரியா ''சமய ஜோதி'' மதுரை.

**தா**யுமானவா நமமைப் பார்த்து ஒரு கேள்வியை எழுப்புகின்ருர். 'அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாச மாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்ததெது?' என்பதே அநதக் கேள்வி. அதற்கான பதில் நமக்கு இந்த விசுவரூப தர்சன யோகததில கிடைக்கிறது. 'விசுவ ரூபம்' என்ற வாாத்தையிலேயே சிறந்த கருதது அடங்கியுள்ளது. இந்த அத்தியாயத்தின் பெயர் 'விசுவ ரூப தர்சன யோகம' என்பதாகும். 'விசுவம்' என்பது இயறகை அலலது பிரபஞ்சத்தைக குறிக்கிறது. 'ரூபம்'

ஏனறால வடிவம். அருவமாகிய பரம் பொருள உருவம் எடுககையில அது இயறகையாகப் பரிணமிககிறது. எனவே இயறகை தான இறைவன. யோகம எனபது வேறு எதுவுமல்ல இயறகையை இறைவனுகக் காண் பதேயாகும் இறைவன் எங்கோ இருககினறான், எப்படியோ இருக் கினறான எனறு நினைப்பதெல்லாம அறியாமை இறைவன இங்கே இருக கின்றான இபபடி இருககினறான என்று நாம் பாாக்கும் ஒவவொன் றையும் இறைமயமாகப பாாப்பது தான உணமையான அறிவாகும அதுவே யோகமும் ஆகும. இயற் கைககுப் புறம்பான இறைவன் வேறு இல்லை. எனவே இயறகையை ஆரா யும் விஞ்ஞானியும ஒரு விதத்தில் இறை ஆராய்ச்சியைத்தான் செய் கினறான. ஆனல் அதை அவன் ஒபபுக கொணடாலும ஒபபுக கொள ளாவிட்டாலும உணமை அதுதான்.

இதைததான இநத அத்தியாயம நமக்குப புகடடுகிறது. பாாககுமிட மெங்கும் நீககமற நிறைநதிருககிறது அபபரிபூரணனந்தப பரமபொருள. பகவான் விசுவரூபக காட்சியை அாஜுனனுககுக காடடுகையில் அநத ஒளி எபபடி இருநதது என பதை அடுதத சுலோகம விளககு கிறது. இது ஒரு முககியமான சுலோகம்.

**திவி ஸூாய ஸஹஸ்ரஸய**
**பவேத் யுகபதுததிதா**
**யதி பா: ஸத்ருசீ ஸா ஸயாத்**
**பாஸஸதஸய மஹாதமன ‖ 12 ‖**

'ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியர் கள சோநது ஆகாயததில் உதித்தால எவவளவு பிரகாசம் இருககுமோ, அநதப் பிரகாசமும் கூட விஸ்வரூபக் காட்சியின் பிரகாசத்திறகு முன்னர் ஒபபிட முடியாதது தான'

ஆயிரம சூரியன் எனறு இஙகே குறிப்பிடுவது வெறும் உவமானத் திற்காகத தானே ஒழிய, மறறு அல்ல. ஒரு சூரியன ஆகாயத்தில் ஒளிாகையிலேயே நமமால் அதைச் சில விநாடிகள் கூடத் தொடாந்து வெறும கணகளால் பார்க்க இயலாது. அந்த அளவிறகு சூரியனின் ஒளி நம கணகளைக் கூசச் செய்கிறது. அப்படி யிருககையில் ஆயிரம சூரியாகள் ஒரே சமயத்தில் வானில் ஓரிடத்தில உதித்தால் அநத ஒளி எவவித மிருககும்? நம மனக்கணணால பாாத தாலேயே அது எவ்வளவு அற்புத மான காட்சியாகத் தெனபடுகிறது! ஆனல் அது நேரில் பார்ககக் கூடிய காட்சியா. புது கற்பனை கடநத ஜோதி!'' என்பதை ஒருவாறு விளககிக் காட்டுவதற்காக இநத உவ மானம கையாளப்பட்டது.

இநத இடததில் நவீன விஞ்ஞான காலததில ஒரு பரிசோதனையைப பறறியும் குறிபபிட வேணடியது அவசியமாகிறது. ஒபபனஹீமா என பவா ஒரு அணுபெளதிக விஞ்ஞானி நோபல் பரிசு பெறறவர். இநதியத தத்துவததிலும குறிபபாக பகவத கீதையில் நாடடம் கொணடவா. அணுகுணடைக கணடு பிடிதது அதை முதலில் பஸிபிக மகா சமுத்திரததில் வெடிக்கச் செயது சோதனை செயது பாாத்தவா. அணுகுணடு வெடித் ததும கணணைப் பறிக்கும ஒரு ஒளிப்பிழமபு அநத இடத்தில் தோனறியது அநதப் பிரகாசததைப பாாததும் அவருககுக கீதையில விசுவரூப தர்சன யோகத்தில இந்த சுலோகம் நினைவிற்கு வநதது என்று அவரே குறிபபிடுகிறா. ஐன்ஸ்டீன, ஸர். ஸி. வி. ராமன, போனற விஞ் ஞானிகள் தஙகளது விஞ்ஞானக கணடு பிடிததல்களும நமது தத்துவக் கருததுககளும் பெரும பாலும் ஒன்று படுகினறன என் பதைக் கணடறிந்திருககின்றனர். அதற்கு இது ஒரு சானறாகும்.

பகவானது விசுவரூபததில் அர் ஜுனன் அகிலப பிரபஞ்சததையும எவ்வாறு பாாத்தான்?

**ததரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம்**
**பரவிபக்தம் அனேகதா |**
**அபச்யத தேவதேவஸய**
**சரீரே பாணடவஸததா ‖ 13 ‖**

'தேவ தேவனை பகவானது விராட ரூபததில் வெவ்வேறாக உளள பிரபஞ்சம் முழுவதையும அவன ஓரிடத்தில திகழக் கணடான!

'மகாத்மா' யாா? எனபதன விளககம் பிரிதொரு இடததில வரு கிறது. ''வாஸு தேவ ஸாவம இதி ஸ மகாத்மா ஸுதுாலப' — பரம பொருள எங்கும நிறைநதது என பதை உணரும மகாதமா காணுதற கரியவர். என்னதான பேசினலும எவ்வளவுதான் உயாநத தததுவம பேசினலும் 'எலலாம இறைவனே, எங கும இறைவனே' எனற உயாந்த தன மையைப் பெறுதல் மிகமிகக கடினம். அபபடிபபடட மனோபாவத்தை உடையவாகளே மகாதமாககள ஆகிறாாகள

பரம்பொருள முதலில் ஒனறாக இருநதது பினனர் ''ஏகோஹம பஹுஸயாம'' — 'ஒன்றாயிருககும் நான பலவாக ஆகக கடவன' எனறு அது எணணிறறும. அப்படியே ஆகி இந்தப் பிரபஞ்சம உருவெடுததது என்பது ஒரு உபநிடதக கருத்தாகும. இதைத தான கமபரும 'ஒனறே எனனின ஒன்றேயாம பலவெனறு ரைககில பல வேயாம்' என்று குறிப பிடுகிறார்

## 'அநேகதா பிரவிபக்தம்'

பலவாகப பிரிநது காணப்படுவது. இவ்வுலகில தான் எததனைவகை ஜீவராசிகள், அவறறில எததனை எததனை பிரிவுகள, அவறறிடையி லுமஎததனை எததனை வேறுபாடுகள நமது உலகைப் போனறு இவவணடத தில வேறு இடஙகளில இனனும் எததனை எததனையோ உலகங்கள இருககலாம அவறறிலும இவற் றைப் போல எண்ணறற ஜீவராசிகள் இருககலாம். அத்தனையும வேறு வேறாக இருக்கலாம், அததனையும் வேறுவேறாக இருககும். அது தான

சிருஷ்டியின மேன்மை. இதைத் தான் ஆங்கிலததில் "Variety is the beauty of nature" என்று சொல்லு கிறாகள். அ ந த வேற்றுமையில் ஒறறுமையைக் காண்பதுவே சர்வ சமய சாரமாகும."Unity in diversity" என்ற வாக்கியம இ தை த் தா ன் விளக்குகிறது.

"ஸஹஸ்ர சீர்ஷா' புருஷ: ஸஹஸ் ராக்ஷ ஸஹஸர பாத் . . . ." என்று புருஷஸூக்தத்தில் வரும் வாக்கியங் களும் இந்தக் கருத்தையே விளக்கு கின்றன விராட் புருஷனுக்கு அதாவது விசுவரூபனுக்கு ஆயிரம் தலைகள், ஆயிரம் கண்கள், ஆயிரம் பாதங்கள். . . . . . என்ற விளக்கம் எதைக் குறிக்கிறது? ஆயிரம் என்பது ஒரு குறிப்பிட்ட எண்ணையல்ல. எண்ணிலடங்காத தலைகள், கண்கள் கால்கள் என்றால் பிரபஞ்சத்தில் உள்ள உயிர்கள் அனைத்தினுடைய தலைகள, கணகள, கால்கள் யாவற் றின் மூலமும் இறைவன வெளிப் படுகின்றான் என்பது கருதது.'அனைத் தும் இறைவனின் சொரூபம்' என்பது இதன் உட்கருத்து.

அத்தகைய காணற்கரிய விராட் சொரூபத்தை, விசுவரூபத்தைக் கணட அர்ஜுனனிடம என்ன மாற் றம ஏறபட்டது?

தத' ஸவிஸ்மயா விஷ்டோ
ஹருஷ்டரோமா தனஞ்ஜய: |
பிரணம்ய சிரஸா தேவம்
க்ருதாஞ்ஜலிர பாஷத || 14 ||

ஆசசரியததில் மூழ்கிய அவன் புளகாங்கிதம்அடைந்து ஒளிமயமான பகவானது விசுவரூபத்தை சிரத்தா பகதியுடன் வணங்கிக் கரம் குவித் துப் பேசலுற்றான்!

பெறறகரிய தொன்றைப் பெற்றவுடன் பொதுவாக ஒரு வனிடம் எத்தகைய மாற்றங்கள் ஏற்படும்? முதற்கண ஒரு அதிசய உணர்வு தோன்றும். அதன் விளை வாக உடலில் புளகாங்கிதம் அல்லது ரோமாஞ்சனம் எனப்படும மயிர்க் கூச்சம ஏற்படும். குறிப்பிட்ட ஒரு கால அளவிற்கு ஒன்றும் செய்யத் தோன்றாதநிலைஇருக்கும்.தான் காண் பதுகனவாஅல்லதுநனவாஎன்றஐயம் அவனிடம் நிலவும். வியப்பு, அச்சம், ஆாவம், ஐயம், போன்ற பல்வகை, உணர்வுகள் அநத வேளையில் ஒன்றோ டொன்று மோதும. அர்ஜுனன் நம் போன்ற சாதாரண மனிதனது பிரதி நிதி தான! அதனால் விசுவரூபத்தைக் கண்ணால அதாவது ஞானக் கண்ணால் கணடதும அவனுக்கு இந்த நிலை தான் ஏறபட்டது.

அர்ஜுனன பெறற விசுவரூபக காட்சியை விடுத்து நம்மவரது சாதா ரண நிலைககு வருவோம். மணிக கணக்கில் கால கடுக்கக கியூவில் காதது நின்றுவிட்டு நத்தை வேகத் தில் கியூவுடன் நாமும நகர்ந்து இறுதியில் 'எப்பொழுது பெறு வோம இறைவனது தரிசனத்தை!' என்று ஆர்வத்தின உச்சக்கட்டத திற்கு உநதப பட்டு திருப்பதி வெங்கடாசலபதி சன்னிதியில் அவரது திவ்விய விக்கிரகத்திறகு முன நிறகையில் எத்தகைய உணர்வு

(30-ம் பக்கம பாாகக)

# பாதம் பணிகின்றேன் தினம்!

திரு. கே. எஸ். சங்கரநாராயணன் - கல்பாக்கம்.

வேலா! வருவாய—நான்
வேண்டும வரம் தருவாய்
பாலா! கேளாய்—அமைதி
என்றும் அருளவாய்!

மயிலேறி வருவாய்—மனம
குளிரக காட்சி அளிப்பாய்!
துயில நீங்கி நினைத்தேன் உன்னை—ஆதரிப்பாய
நீ உடன என்னை!

பழனியிலே நீ நின்றாய்—பக்தர்கள்
மனத்தினில அமர்ந்தாய்!
கழனியெலாம் செழித்திடுமே—உன்னருளால்
கலையெலாம் ஓங்கிடுமே!

தணிகையிலே உனை வேண்டினேன்—அருள்
செய்யாதோ உன் மனம்?
மணியும் பொன்னும் வேண்டிலேன்—உன்
பாதம் பணிகின்றேன் தினம்!

வேலாயுதம கொண்ட வடிவேலா!—வினைகளை
வேரறுக்கும வயலூரா!
காலனையும் கதறி ஓடவைப்பாய—காந்தமாய்
எங்களை நீ ஈர்ப்பாய்!

செந்தூர்க் கந்தன் நீ!—கண்கண்ட
கலியுக வரதன் நீ!
இந்திரன் மருமகனும் நீ!—இணையிலா
இன்பம் தருவோனும் நீயே!

தொடா கட்டுரை :

# சிறையிருந்த செல்வி

திரு. என. கிருபானநதன,
M A., BSc, Jr Dip-i-Ling
திருப்பதி.

தாவரஙகளும், விலஙகுகளும படிப்படியாகக் காலத்தின் போக்கில் வளர்ச்சியையும், மாறுதல்களையும அடைந்துவநதுள்ளன என்று சார்லஸ் டார்வினது பரிணமக் கொள்கை (Theory of Evolution) கூறுகிறது. உயிரினங்களின் உருவம், அமைப்பு இவற்றில் மாறுதல்களும் வளர்ச்சிகளும் அமைந்திருப்பதைப் போலவே அவற்றின் அறிவிலும் படிப்படியான வளர்சசியை நாம் காணலாம்.

பட்டறிநதாலும் அநத அனுபவத்தைப் பயனபடுத்திக் கொள்ளாத உயிர்கள் பல. நெருப்புச்சுட்டழிக்கும் என்பதைத் தம் இனத்தின் பிறபூச்சிகளின் அழிவைக் கணடு தெரிந்து கொணடாலும தானும் அந்நெருப்பைக்கணடு மயஙகி கருகும் விட்டில பூச்சி. சில உயிரினங்கள் தானே நேரில் அனுபவித்துத்தெரிந்து கொண்டாலும் உடனே அதை மறந்து மீண்டும் அதே தவற்றைச் செய்யும். ஒரு சில பிராணிகள் அனுபவித்துத தெரிநது கொண்ட பிறகே உணமையை உணர்ந்து கொள்ளும். மனிதன் மட்டும்தான் தன் பட்டறிவைக் (அனுபவத்தைக்) கொணடு தன் தவற்றை உணர்ந்து தன்னை மாறறிக்கொள்ள முயலுகிருன. மக்களிலும் சிறந்த அறிஞர்கள் மட்டுமே பிறர் பட்டறிவைக கொணடும் சிறந்த நீதிகளை உணர்ந்து கொள்வர்.

இவ்வாறே உண்மையை மனிதர் அனைவராலும உடனடியாக உணர முடிவதில்லை. ஐயம் கொள்வர். அறிவுடையோரே கண்டதும் எது நல்லது ? எது கெட்டது ? யார் நல்லவர்? யார் கெட்டவர்? என்னும் உண்மையை உணர்வர். மேற்கண்ட வற்றிறகுச சானருகச் சுககிரீவன, அநுமன் இருவரையும் கொள்ளலாம்.

இராமனும் இலக்குவணனும் சீதையைத் தேடியவாறு உருசியமூக மலையின் மீது ஏறுகின்றனர். அதை மறைந்து நின்று காணகிருன் சுக்கிரீவன். திடுக்கிட்டு அஞ்சும் சுக்கிரீவன், அவர்களை வாலி அனுப்பிய பகைவா என்று எண்ணுகிருன். செய்வது தெரியாது 'தப்பிப் பிழைத்தோடிப் போவோம்' என்று ஓடுகிருன். அருகில் நின்ற அநுமனிடம் இராம இலக்குவனர்களைக் காட்டி விட்டு மறைந்து கொள்ள குகையைத் தேடி ஓடிவிடுகிருன சுககிரீவன். சுக்கிரீவனுக்குத் தேறுதல் கூறி, அநுமன், ஒரு பிரம்மச்சாரி (மானி) வடிவம் தாங்கி இராம இலககுவணரை மறைந்து நின்று ஆராய்கிருன்.

இராம இலக்குவணர்களைப் பார்த்ததும் அவர்கள் பகைவர் அல்லர் என்று அவர்கள் உருவத்தைக் கொணடே முடிவெடுக்கிருன் அநுமன்.

''தேவரொப் பருதலைவ ராமுதற
றேவரெனின்
மூவர்மற் றிவரிருவர் மூரிவிற் கரரிவரை
யாவரொப பவருலகின் யாதிவாக்
கரியபொருள
கேவலத் திவர்நிலைமை தோவதெக்
கிழமைகொடு''

(கிட்கிந்தா. அநுமப படலம்-5)

'இவர்கள் தேவர் தலைவரான முதல் தேவர் ஆவர் எனக் கருதுவோமானல் அவர்கள் அயன், அரி, அரன் என்ற மூன்று பேர் ஆவர். இவர்களோ இருவராய உள்ளனர். வலிமை மிக்க சங்கு, சக்கரம், மழு இவற்றிற்குப் பதிலாக வலிமை மிக்க வில்லைக் கையில் ஏந்தியுள்ளனர். இவாகள் தேடியடையக கூடிய அரிய பொருள் யாது உள்ளது? (ஆகவே இவர்கள் சுக்கிரீவன் கருதுவது போல பகைவர் அல்லா)

'இவாகள் மனதில ஏதோ ஒரு சிறு துயரம் வந்துற்றமையால் அக்குழப்பத்தால மனம் நோவுற்றுச சோர்ந துள்ளார்கள். எனினும் எளியவராகவும் உள்ளார் அல்லர்; ஆதலின வானில் வாழும தேவாகள மானிட வேடத்தில் வந்தனர் போலும்! இவர்கள் அரிய பொருளை ஒன்றைத் தேடுதற்காக இஙகு வந்த தன்மையுடையவரே யன்றிச் சுக்கிரீவனைக் கொல்ல வந்தவரலலா;

'இவர்கள் தருமமும் நன்னடையும ஆகிய இவற்றைத தமக்குரிய அரிய பொருளாக மதிக்கும தன்மையுடையவர்கள். இவர்கள் இங்கு வந்த காரணமும் ஒரு பொருளைக் கவர அன்று. அதை எண்ணிப் பாாததால் இவ்விருவரும் தேவாமிர்தம் போன்ற ஒன்றை இழந்துவிட்டதைப் போலக காணப்படுகின்னறர். அப்பொருளை இவ்விருவரும் வழிநெடுகத் துருவித துருவி ஆராயந்து தேடுகின்றனா. ஆகவே இவர்கள சுககிரீவனைக கொல்ல வநதவா அல்லர்'' எனறு பலவாறு எணணுகிருன் அநுமன். ஆக முதல பார்வையிலேயே இராம இலககுவணர் மீது நல்லெணணம்கொண்டு, உணமையை முதலிலேயே உணர்நது கொளகிருன். பலவகையில அவன் ஆராய்ந்து எண்ணும அறிவையும் இதனல் நாம் அறியலாம்.

இதைபபோலவே, அறிவுச செலவியான சீதையும் அசோக வனத்தில் தன்முன் வந்து நின்ற அநுமனைப் பார்த்ததும் அவன்பால் நல்லெணணம் கொள்கிருள்.

''நின்றவன் நிருதன அல்லன் நெறி
நின்று பொறிகள் ஐந்தும்
வெனறவன அல்லன் ஆகில் விண்ண
வன் ஆக வேண்டும்
நனறுணர் வுரையன தூயன்
நவையிலன்....''

(சுந்தரகாண்டம்.
உருககாட்டுப் படலம்-26)

அதாவது, ''எதிரில் நின்றவன அரக்கனல்லன், நல்லொழுககத்தில் தவறாது நின்று ஐம்பொறிகளையும் அடககிய முனிவனுவான். அப்படி யில்லாவிடடால் தேவனு விருக்கக் கூடும் ஏனெனில் இவன் நல்லறிவைப் புலப்படுத்துகிற சொற்களை யுடையவனும், தூயனும், குற்ற மில்லாத தொழில் உடையவனும் ஆவான்.''

மேலுும என் உள்ளம் இவனைக் கணடு இரஙகுகின்றது. இவன் கபட முடைய அரக்கர் வார்த்தையைப் போன்ற வாாத்தையை உடையவ னல்லன். நல்ல எண்ணத்தையுடைய சொற்களோடு, கண்ணீா பூமியிற பெருகுமபடி புலம்பியவாறு நிற்கிறுன். ஆகவே இவன் பகைவ னல்லன' என்று எணணுகிருள் சிறையிருநத செல்வி.

ஆக நல்லோரை அடையாளங கணடு கொளளும் தன்மையையும, அவாகளது உருவம், செயல் இவற றைப் பலவாறு ஆராயும அறிவை யும் அறிவின் செல்வனுன அநுமன் பெற்றிருப்பதைப் போலவே அறிவுச் செல்வியான சீதையும் பெற்றிருக் கிருள் என்பது இதனுல் தெரிகிற தன்றே?

சுக்கிரீவன் இராம இலககுவனரைச் சரியாக அடையாளங் கணடு கொள் ளாததற்கு அவனது உயிர் மீதான ஆசையும், பயமுமே காரணம் என்று வாதிடக் கூடும். சீதையின் நிலையும் ஒருவகையில் அதுபோன்றது தானே? மாயத்தில் வல்ல அரக்கரது நகரில், கடல் சூழ்ந்த இலங்கையில் சிறை வைக்கப்பட்டிருக்கிருள் சீதை. இராவணன் வேறு, அதற்குச் சற்று முன்னர்தான்பயமுறுத்திச சென்றுள ளான். ஆக அநுமனை, முன்பு துறவி வேடம் பூண்டு ஏமாற்றிய இராவ ணனைப் போல, இந்த வேடம் பூணடு வந்த ஓர் அரக்கன் இராவணனின் ஏவலின்படி வந்தவன் என்று சீதை கருதிப் பயந்திருக்க வாய்ப்பு உண்டு. பேசவும் மறுத்திருககலாம். 'அரிய கடலையும், அரக்கர் கூட்டததையும் கடந்து இவ்அநுமன் இராமனிட மிருந்து வந்திருப்பானு? என்று ஐயுற்றும் இருக்கலாம். ஆனுல் அவ்வாறு அநுமனைத் தவறுக எண்ணி விடாமல், அவன் உருவை, அவன் பேச்சைப் பலவாறு ஆராய்ந்து நல்லவன் என்று இனங்கணடு கொள்வதிலிருந்தே சீதை தான் ஒரு அறிவுச் செல்வி என்று நம்மைஉணர வைக்கிருள்.

அப்படியென்றுல் மாரீசன ஓர் மாயமான் வடிவம் தாங்கி வந்தானே, இராவணன் துறவி வேடத்தில் வந்தானே, அப்பொழுது எல்லாம் ஏன் சீதை உண்மையை உணரவில்லை என்று நம்முள் ஓர் ஐயம் தோனற லாம். அதைப் பின்னர் ஆராய உள்ளோம் என்பதால் இங்கு அதைப் பற்றி எழுதுவது தேவையற்றதாகும்.

பிறரது தன்மையை முதல் நோககி லேயே கண்டு பிடித்துவிடுதலைப் போலவே, அவாகளது ஆற்றலையும நன்கு மதிப்பிட்டுவிடுவர் அறிவுடை யோர். அறிஞரல்லாதாரே பிறரது வலிமையையும், ஆறறலையும் அவரது சொல, செயல் இவற்றில சில சோதனைகளை வைத்தோ அல்லது பிறர் வைத்த சோதனைகளை உற்றுக கவனித்தோ உணாவர். இங்கும சுக்கிரீவன் அநுமனையே இவற்றிற்கு உதாரணமாகக் கூறலாம்.

இராமனைக் கணடவுடன் அவனது அளவற்ற ஆற்றலை உணர்ந்து விடு கிருன் அநுமன். அதனுல்தான் சுக்கிரீவன் இராமனது ஆற்றலை முதலில் ஐயுற்று மற்றவரிடம் அதுபற்றி ஆராய முற்படும்போது அநுமன இவனது ஆற்றலைப் பலவாறு எடுததுரைப்பான்.

''சங்கு சககரக் குறியுள தடக்கையிற்
றுளிவ
எங்கு மித்தனை யிலககணம
யாவர்க்கு மிலலை
செங்கண் விறகரத் திராமனத திரு
நெடு மாலே
இங்கு திததன னிணடற நிறுத்துதற
கின்னும்''

(கிட்கிநதா. நடப்புப்படலம்-152)

'பெரிய கைகளிலும், திருவடியிலும் சங்கு சக்கரஙகளாகிய இரேகை அடையாளங்கள் உள்ளன. உலகில் வேறு எங்கும், யாரிடத்தும் இவ் வளவு சிறந்த இலககணம் அமைந்தது இலலை. ஆகவே இந்த இராமன் அநத அழகிய திருமாலே ஆவான். இவ்வுலகில் அறத்தை நிலைநிறுத்தவே அத்திருமால் இந்த இராமனுகத் திரு அவதாரம் செய்துள்ளான்.

இவன ஆற்றல் அளவற்றது. முப புரங்களையும் தன் ஒரு கோபச் சிரிப் பால எரித்தவரும், காலனையே காலால் உதைதது அழித்தவரும் ஆன சிவபெருமானது பெரிய வில்லையே எடுத்து நாணேற்றி ஒடித் தெறிந்த அருஞ்செயலைச் செய்தவன் இராமன். இவவளவு வலிமை வேறு எவருக்காவது உண்டா?' என்று பலவாறு இராமனது வலிமையைச் சுக்கிரீவனனுககுக் கூறுகிறுன்.ஆனுல் சுக்கிரீவனனே இராமன் ஏழு மராமரஙகளை ஒரே அம்பால் துளைத்த பினனரே அவனது வலிமையை ஐயமற உணருகிறுன்.

எவவாறு அறிவின் செல்வனுன அநுமன் இராம இலக்குவனரது வலிமையை, ஆற்றலை முதலிலேயே நன்கு அடையாளம் கண்டு கொண்ட னனே, அதுபோன்றே அறிவுச் செல்வியான சீதையும் அநுமனது ஆற்றலை உடனடியாகக கண்டு கொள் கிருள். ஐயுறுவதில்லை. அநுமனிடம்

அவள் பேசும் முதல் சொலலே 'வீர நீ யாவன'(கிட்கிநதா. உருககாடடுப படலம்-28) எனபதாகும மேலும் அநுமனைப் 'பாழிய பணைத தோள் வீர?' 'பாழி நெடுந்தோள் வீரா!' எனறெல்லாம் புகழகிறுள் இஙகு நமக்கு ஓா ஐயம எழக கூடும. அநு மனது ஆற்றலைச் சீதை நன்கு உணாந தவள் என்றுல் ஏன் அநுமனைக கடலை எவ்வாறு கடநது வநதாய்? எனறு கேட்டாள்? இங்கு நாம சீதையின் நிலையை மனேதத்துவ முறையில் ஆராய வேணடும். அதிக மகிழ்ச்சியோ, துயரமோ திடீரெனத் தாக்கும்போது ஒருவா எவவளவு அறிஞராக இருபபினும் சற்று உணர்ச்சி தடுமாறுவார். அதிக மகிழச்சியை அடையும போது நாம் கேட்கும் கேளவிகளும, பேச்சும் சற்றுப் பொருத்த மற்றவையாகவும், பொருளற்றவையாகவும் இருப்பதை நாம பலமுறை உணரலாம். அவ வாறே இராமன் வரமாட்டானே எனனவோ எனற ஐயமும, இராவ ணன் தரும் துன்பமும் அவள் மனதைக் கலக்கிக்கொணடிருக்கும சமயததில் திடீரென இராமனது மோதிரத்தை அநுமன மூலம பெறற போது அதைக்கண்ட அளவற்ற மகிழ்ச்சியால, இராமன் செய்யும முயற்சியால் உணடான அளவற்ற நம்பிககையால் சீதை சற்று நிலைதடு மாறி இருக்க வாயப்புண்டு. அதிலும பெண. ஆகவே அடுத்து அநுமனிடம எனனபேசுவது? என்று உடனடியாக புரியாத மயக்கததால் இவவினவைக கேட்டிருக்கலாம். மேலும அவள் அநுமனிடம கேட்கும் கேள்வி ஐயத தால எழுநததனறு. அநுமன ஆறறல மீது அவள ஐயமுறறிருந்தால. முதலிலேயே, அநுமன இராமனிட மிருநது அலைகடலையும், அரககா கூட்டத்தையும் கடந்து வந்திருப பான் என்று நம்பியிருககமாட்டாள். இராவணன செயத சூழச்சி என்று அநுமனேடு பேசாமலிருநதிருப்பாள். ஆகவே அநுமனிடம் 'கடலைககடந்து எப்படி வநதாய' எனறு கேடகும வினு ஐய வினுவன்று, சிறிய உருவம தாங்கி எப்படி இந்தக கடலைக கடந்து வந்தான? என்ற செயதியை அறிய விரும்பும் ஆாவ வினுவே யாகும. ஆகவே சிறையிருநத செல்வி ஓா அறிவுச் செலவியாகவும திகழ்கிறுள் எனபதில ஐயமில்லை

(தொடரும்)

(27-ம் பககத தொடர்ச்சி

நமமிடம் மேலிடுகிறது எனபதைப் பறறி நாம் கொஞசம சிநதிததுப் பாாபபோமே! புளகாங்கிதம அடை வோா எத்தனைபேர்! கணணீா மல் கும் கண்களையுடையோா எததனை பேர்! மெய்மறநது நிற்பவர் எத்தனை பேர்! ஏற்கெனவே பலமுறை பார்த் துப் பழகிய ஒரு விக்கிரகத்திறகே இத்தகைய சக்தி இருக்குமாகில பகவானது ஸாக்ஷாத் விசுவரூப தர் சனததில் அா்ஜுனனிடம ஏற்பட்ட மாறறங்களைப் பறறிக கூறவும் வேணடுமோ?

அத்தகைய மதுர மாதுாய மனே கரமான ரூபத்தைப் பாாத்ததும், அா்ஜுனனது மனதில ஒரு வித பயத்துடன கூடிய பக்தி மேலிட்டது. அதுவரை கிருஷ்ண ரைத தனது தோழன 'உறவினன் என்றெலலாம எணணி நின்றவன் இப்பொழுது இந்த அதியறபுதமான, மிகவும் பயங்கரமான—அதே வேளை யில் தெய்வீகமான – விசுவரூபத்தை, அதாவது அணடமெல்லாம் அவனுள் அடஙகிய அதிசயக்காட்சியைக கணடதும், ''இநதக் கிருஷ்ணன் எனககு வெறும் தோழனல்லன, உறவினன மாத்திரம அல்லன். இவன் ஸாக்ஷாத் பரமேஸவரனே'' என்னும தீர்மானத்திற்கு வநது விடு கிறுன. நம்மோடு மணிக்கணக்காக வேடிககையும் விநேதமுமாகச சிரித்துப் பேசிய நபர் நம நாடடு பிரதம மந்திரியே என்று திடீரெனறு நமக்குத் தெரிய வருவதாக வைத்துக் கொளவோம். உடனே நமது நிலை எப்படி மாறிவிடும சொல்லவா வேணடும் சாதாரண ஒரு மனிதரது நிலையே நம்மை மாற றியமைக்குமாகில், சர்வேஸ்வரனது விசுவரூபத்தினுல அர்ஜுனனிடம ஏற்பட்ட மாற்றத்தை எடுததுக் கூறவும வேண்டுமோ? பகவானது விசுவரூபத்தைக் கண்டதும அர்ஜுனன் பக்தி மேலீட்டால் கூபபியக் கரங்களுடன் கூறலானுன்.

பச்யாமி தேவாஸ்தவ தேவ தேஹ
ஸர்வான்ஸ்ததா பூதவிசேஷ
ஸங்கான் |
பரஹ்மாணமீசம கமலாஸனஸ்ததம
ருஷீனஸச ஸாவானுர காஸ்ச
திவயான் || 15

''தேவா! நான உமது சரீரததில் அனைத்துத் தேவர்களையும், அது போல பூதகணங்களையும், தாமரை மலரில் திகழும் பிரம்மாவையும், மகாதேவனையும், அனைத்து ரிஷிகளை யும காணகிறேன்.''

புல் முதல் பிரம்மா வரை அனைத தும சிருஷ்டிககப பட்டவையாகும யாரால? சிருஷ்டி கர்த்தாவால் அந்த சிருஷ்டி கர்ததாவின் விசுவ ரூபத்தைத் தான இப்பொழுது அாஜுனன் காணகிறுன். ஒருபுறம தேவாகள கூட்டம், மறுபுறம் பூத கணங்கள். ஒரு புறம் ரிஷிகளின் கூட்டம, இன்னெருபுறம வாசுகி போனற திவ்விய சாப்பஙகளின கூடடம, மறறுமொரு புறம மகா தேவன். இப்படிப் பல் வேறு காட்சி களை அர்ஜுனன் காண்கிறுன்.



(16-ம் பக்கத் தொடர்ச்சி)

வரபெருமாள் என்ற பெயரோடு நிலமங்கை வல்லித் தாயாரோடு கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். விமானத்திற்கு ஜகதீஸ்வர விமானம் என்று பெயர். இவர் அக்ரூரருக்குப் ப்ரத்யக்ஷமாயிருப்பதாக வரலாறு. அதன் காரணமாகவுள்ளது அக்ரூர தீர்த்தம்.

திருமங்கையாழ்வார் ஒரு திரு நெடுந்தாண்டகம் பாடுகிறார்.

''நீரகத்தாய்! நெடுவரையினுச்சி மேலாய்!
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி
ஊரகத்தாய்! ஒண்துறை நீர் வெஃகா வுள்ளாய்!
உள்ளுவாருள்ளத்தாய்! உலக மேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!
காமரு பூங்காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய்! பேராதென் நெஞ்சி னுள்ளாய்!
பெருமானுன் திருவடியே பேணி னேனே!

இதில் ஏழு திவ்ய தேசங்களை மங்களாசாஸனம் செய்து விடுகிறார். அவை திருநீரகம், நிலாத்திங்கள் துண்டம், ஊரகம், திருவெஃகா, திருக்காரகம், திருக்கார்வானம், திருக்கள்வனூர். இவற்றுள் முதலில் திருநீரகம் இடம் பெற்றுள்ளது.

## நிலாத்திங்கள் துண்டம்

இந்தச் சன்னதிக்குப் போகவேண்டுமானால் ஏகாம்பரேஸ்வரர் கோயிலில் நுழைய வேண்டும்! ஏன் என்கிறீர்களா? பாடல் பெற்ற ப்ரசித்தமான இந்த ஏகாம்பரேஸ்வரர் கோயிலுக்கு உள்ளேதான் பாடல் பெற்ற இந்த 'நிலாத்திங்கள் துண்டம்' என்ற கோயில் உள்ளது. சைவ வைணவ ஒற்றுமைக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்!

ஏகாம்பரேஸ்வரர் சன்னதி ப்ராகாரத்தைச் சுற்றிவரும்போது இந்தப் பெருமாள் சன்னதியைக் காணலாம். பெருமாள் திருநாமம் நிலாத்திங்கள் துண்டத்தான்.

நேரொருவரில்லா வல்லி என்பது தாயார் பெயர் புருஷசூக்த விமானம். மேற்கே நோக்கி நின்ற திருக்கோலம். சிவனுக்குப் ப்ரத்யக்ஷம். சந்திர புஷ்கரணி. கலியன் மங்களாசாஸனம் செய்திருக்கிறார்.

## ஊரகம்

உலகளந்த பெருமாள் கோயில் தான் 'ஊரகம்' என்று அழைக்கப் படுகிறது. மேற்கே நோக்கியுள்ள இக்கோயிலில் உலகளந்த பெருமாள் த்ரிவிக்ரமன் ப்ரம்மாண்டமாக நிற்கும் அழகைக் காணக் கண்கோடி வேண்டும். அண்ணாந்து பார்க்க வேண்டிய திருமேனி. தாயார் அமுதவல்லி என்ற பெயரோடு அருள் பாலிக்கிறாள். இக்கோயில் எம்பெருமான் ஆதிசேஷனுக்கு அருள் புரிந்திருப்பதாக வரலாறு. இவரை கலியன் தவிர, திருமழிசையாழ்வாரும் மங்களாசாஸனம் செய்திருக்கிறார். இங்குத் தைமாதம் ப்ரம்மோற்சவம் நடைபெறுகிறது. விமானத்திற்கு ஸாரஸ்ரீகர விமானம் என்று பெயர்.

## திருவெஃகா

வரதராஜர் கோயிலுக்கு மேற்கே சுமார் ஒரு மைல் தொலைவில் உள்ள திவ்ய தேசம் இது. திருவெஃகா என்பதைவிட 'யதோக்தகாரி கோயில்' அல்லது சொன்னவண்ணம் செய்த பெருமாள் கோயில்' என்ற பெயரில்தான் ப்ரபலமடைந்திருக்கிறது.

இரண்டு தெய்வீகமான வரலாறுகளைப் பின்னணியாகக் கொண்டது இந்த க்ஷேத்ரம். ப்ரம்மா காஞ்சியில் யாகம் செய்தபோது, ஸரஸ்வதி பலவித இடையூறுகள் செய்தாளல்லவா? அவற்றுள் ஒன்று வேகவதி என்ற நதியாக உருவெடுத்து வெள்ளப் பெருக்கை ஏற்படுத்தியது. ஆனால் ப்ரமனின் வேண்டுகோளுக்கிணங்கி பெருமாள் அந்த நதி ஓடிவரும் திசையில் அணையாகப் படுத்துக் கொண்டு விடுகிறார். விக்னமில்லாமல் யாகம் நடக்கிறது. அப்படி வேகவதி நதியை 'சேது' வாக, அதாவது அணையாக இருந்து தடுத்தமையால் ''வேகாசேது'' என்று இந்த திவ்ய தேசத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாள் அழைக்கப் படுகிறார்.

மற்றொரு வரலாறு. திருமழிசையாழ்வார் இங்குக் கோயிலில் சேவை செய்து கொண்டிருந்தபோது, அவருக்கு கணி கண்ணன் என்றொரு சிஷ்யன் இருந்தான். அவன் ஒரு சிறந்த கவி. ஒரு நாள் கோயிலில் சேவை செய்து வரும் கிழவி ஒருத்தி இவனிடம் வந்து, தனக்காக பெருமாளிடம் வேண்டி இளமையை வரவழைத்துக் கொடுத்தால் இன்னும் அதிகமாகப் பணிபுரிய தெம்பு கிடைக்குமே என்று வேண்டுகோள் விடுத்தாள். கணிகண்ணன் பாடல்கள் பாடி அந்தக் கிழவியைக் குமரியாக்கி விடுகிறான். இதைக் கேள்வியுற்ற அந்த ஊர் அரசன், தன்னையும் இளமையாக்க வேண்டினான். கணி கண்ணன் மறுக்கிறான். உடனே கோபம் கொண்ட அரசன் கணி கண்ணனை நாடு கடத்த உத்திரவிடுகிறான். கணிகண்ணனும் தன் குரு திருமழிசையாழ்வாரிடம் சென்று விடைபெற்று கிளம்புகிறான்.

உடனே ஆழ்வார். சிஷ்யன் இல்லாமல் நான் இருக்கமாட்டேன்: அவனோடு நானும் போகின்றேன். ஆகையால் பெருமாளே, நீயும் உன பைந்நாகப் பாயை சுருட்டிக்கொண்டு கிளம்பு என்று உத்தரவிட்டார்! என்ன ஆச்சர்யம்! படுத்திருந்த பெருமாள் ஆழ்வார் பின்னாலே புறப்பட்டு நடக்க ஆரம்பித்தார்!

பகவான் அகன்றதும் காஞ்சி களையிழந்தது. மக்கள் வாடினர். அரசன்

தன் தவறை உணர்ந்து கணி கண்ணனை மறுபடியும காஞ்சிக்கு வருமாறு அழைகக, அவனும் திருமபி வந்தான் ஆழ்வாரும் திரும்பினுர் 'கணி கண்ணன வநது விட்டான்; நானும வநது விடடேன், நீயும் முன்போல் பைநநாகப்பாயை பிரித்து படுததுககொள' என்று கடடளையிட, பெருமாளும் அவ வாறே படுததுக கொள்கிறுர்!

இப்படி ஆழவார் சொனனபடி யெலலாம பெருமாள் செயதா ரல்லவா? அதனுல, 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்று பெயர் பெறறுர்!

கணி கணணனுேடும் ஆழவா ரோடும் புறப்படடுச சென்ற பெரு மாள் காஞ்சிக்கு மூனறு மைல் தொலைவிலுள்ள ஓர் இடததில அன்று இரவு முழுவதும தங்கினுராம. அந்த இடம் இனறும் 'ஓரிக்கை' (ஓர் இரவு இருக்கை) எனறழைக்கபபடுகிறது. இனறும் இந்தக் கோயிலில தை மாதம நடக்கும் உறசவத்தில் பெரு மாள் 'ஓரிககை' எனற இடததிறகு வருகிறுர்.

பெருமாள் மேற்கே நோக்கி புஜங்க சயனத் திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறுா தாயார் கோமளவல்லி நாச்சியார். வேதகார விமானம. இங்குள்ள புஷ்கரணியில் தான் முதலாழ்வாாகளில முதலவரான பொயகையாழ்வார் திரு அவதாரம செய்தார். அதனுல் இது பொய்கை புஷகரணி என்று அழைக்கபபடு கிறது

இந்த எம்பெருமானை திருமழிசை பிரான 'வெஃகனைக்கிடநதது என்ன நீாமையே' என்றும, பொய்கை யாழ்வார் 'விண்ணகரும்வெஃகாவும்' எனறும், நம்மாழ்வாா 'விணணுோ தொழும் கண்ணன் வெஃகா' என் றும், கலியின் 'வெஃகாவில் திரு மாலை' என்றும் மஙகளாசாஸனம் செய்துள்ளனர்.

## திருக்காரகம்

இதுவும் உளகளநத பெருமாள் கோயிலுக்குள் உள்ள ஒரு சன்னதி. பெருமாள் கருணுகரப பெருமாள். தாயாா பத்மாமணி நாச்சியாா. வாமன விமானத்தினடியில் தெறகு நோக்கி நினற திருக்கோலத்தில் இருக்கும் இவர், கார்ஹ ரிஷிககுப ப்ரத்யக்ஷமாயிருபபதாக வரலாறு. அம்பரீஷ சரஸ்.

## திருக்கார் வானம்

இதுவும உலகளநத பெருமாள் கோயிலுக்குள்உள்ள சன்னதி. பெரு மாள திருநாமம் கள்வா பெருமாள். தாயாா கமல வல்லி நாச்சியாா. புஷகல விமானம். இவர் கௌரிக் கும பரத்யக்ஷமாயிருபபதால் இந்த திவய தேசத்து தீர்த்தத்துக்கு கௌரி தாடகம எனறு பெயர்

## திருக்கள்வனூர்

எபபடி நிலாத்திங்கள் துணடம் எனற திவ்ய தேசம் ஏகாமபரேஸ் வரர் ஆலயததினுள் இருககிறதோ, அதேபோல் இந்த திருக்கள்வனூர் காமாக்ஷி ஆலயததினுள இருககிறது!

ஒரு சமயம மகாலஷ்மி தானதான மிக அழகுடையவள் என்ற செருககி ஞல மஹாவிஷ்ணுவை பரிகாசம்செய் கிருள். சாபவிமோசனம வேணடி இநத காமகோட்டத்தில வந்து தவ மிருக்கிறுள. அனனை காமாடசியின் அருளால் இழநத சௌநதர்யத்தை மீணடும் பெறறு விடுகிறுள். எழில ததுமபும் லக்ஷமியை அழைத்துக் கொளள மஹாவிஷ்ணு 'கள்ளப பெருமாள்' எனற பெயரோடு வரு கிறுா.

இன்றும் காமாக்ஷி சன்னிதிக்கு வடககே உளள மாடத்தில் கள்வரும் ரூபலக்ஷமியும கோயில் கொணடுள்ள னர். இநதசசன்னதியைததான திருமங்கை ஆழ்வாா 'கள்வனூர்' என்று போற்றியுள்ளாா. பெருமாள் ஆதிவராகப் பெருமாள எனறும, தாயாா அஞ்சிலை வல்லி நாச்சியாா எனறும் அழைககப் படுகினறனா. கலியன் இந்த பெருமாளை 'களவா' என்று அழைககிறுா

## பரமேச்சுர விண்ணகரம்

இதுதான பரசிததமான வைகுண டப்பெருமாள் கோயில பெருமாள பெயர் பரமபதநாதன வைகுநத வல்ல நாச்சியார் எனபது தாயார் பெயர். முகுந்த விமானம மேற்கே நோககி வீற்றிருநத திருக்கோலம. ஐராவத தீர்த்தம. பல்லவனுக்கு ப்ரத்யக்ஷம. இக்கோயிலில் வை குணட ஏகாதசி மிகப்பெரிய உறசவ மாகக் கொணடாடப்படுகிறது. மேறகு பார்தத கோயிலில் மூலவா பரமபதநாதன் அமாந்த கோலததில் இருகக, விமானத்தின் இரணடாவது மூனருவது தளங்களில் பெருமாள நின்ற, கிடநத கோலங்களில் சேவை சாதிக்கிறுா. திருமங்கையாழவாா இநத திவ்ய தேசததை 'பலலவா கோன பணிநத பரமேசசுர விணண கரமதுவே' எனறு மங்களாசாஸனம செய்கிறுர்.

## திருப்பவள வண்ணம்

பெருமாள பெயா பவளவணணப பெருமாள. தாயாரோ பவளவல்லி நாசசியார் பவளவிமானம. மேறகு நோககி நினற திருக்கோலம. சக்ர தீர்ததம். அஸ்விநி தேவதை களுககும பாாவதிககும் பரதயக்ஷம. கலியன 'பவளவணணு எங்குற்றுய' எம்பெருமான' எனறு பாடி இருக்கிறுர்.

இத்தகு புராணசசிறப்பும வர லாற்றுச சிறப்பும் கொணட புணணியத் தலங்களுக்கு ஒருமுறை சென்று வநதால நம் பழவினைகள் விலகாதோ?



# திருச்சாலைத்துறை நின்றருளிய எம்பெருமானுர்

**புலவர். சீ. இலட்சுமணன், பி.லிட்.**
**சிங்கம்புணரி.**

உலகத்துச் சமயங்களில் தொன்மை வாய்ந்ததும், ஆழ்ந்த கருத்துக்களையும், சிறந்த தத்துவங் களையும் உடையதுமாய சமயம் நமது இந்து சமயம். கல்வியறிவற்ற சாதா ரண மனிதன் முதல் அறிவு சான்ற பேரறிஞா வரை போற்றிப் புகழ்ந்து பரவத்தக்க கதைகளையும் தத்துவங் களையும் தன்பால் கொண்டுளள சமய முமிதுவே. பல்வேறு சமயங்களின் தத்துவங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளமையால் தத்துவங் களால் சிறப்புப் பெற்ற சமயங்களும், படைவலிமிக்க அரசின் ஆதரவும் அதிகாரப் போதையும் கொண்ட சமயங்களும், வெல்லத்தைக் காட்டி ஈய்க்களை இழுப்பது போல் சலுகை களைக் காட்டி ஏழை எளிய பாமரர் களைத் தன் பாலிழுக்கும் சமயங் களும் முட்டி மோதியும் அசையாம லிருப்பதும் இந்த இந்து சமயமே

சமயத்தின வழியும சாதாரண நடைமுறை வழியும் நோக்குங்கால் உலகம் தோற்றம, நிலைபேறு, அழிவு எனும் மூன்று செயல்களையுடையது. இம்முத்தொழிலையும் செய்பவர் மூவர். நடுவணதாகிய காக்கும் காரி யததைச செய்பவர் கரிய செம்ம லாய திருமாலே யாவார். உயிர் கட்குத்தான் உணவாவதுடன் ஏனைய உணவுப் பொருள்களை ஆக்கித் தரு வதும் நீரேயாம். அநதத் தண்ணீரை வையத்திற்களிக்கும் மேகத்தின் வண்ணத்தையுடையவர் திருமால். ஆகவே நீலமேக சியாமள வணணன் என அழைக்கவும் படுகிறுர். "கரு முகில்" "காளமேகம்" எனறெல் லாம் ஆழ்வார்களும் அழகுறக்குறித் துள்ளனர். உலகம் யாவற்றையும் உளவாக்கி, நிலைபெறச் செய்யும் உலகளந்த உத்தமனுக்கு மலைமுகடு களிலும், முல்லை நிலததிலும், ஆற் றிடைகளிலும், கடறகரைகளிலும் பல ஆலயங்களுள. காத்தருளும் கண்ணனுக்குத் தனிக்கோவில்களும் தனித்தனித் திருக்கோலங்களுமுள. சிவன்கோவில்களிலும் திருமாலுக்குச் சந்நிதிகளுள. ஆம் வைணவமும் சைவமும் இந்து சமயத்தின் இருகண களன்றோ! அறியாரே அரி, அரன் எனப் பிரித்துப் பார்ப்பர். "அரன் நாரணன் நாமம், ஆன் விடை புள்ளூர்தி" என அறிவுறுத்திஞா முதலாழ்வார்களுள ஒருவராய பொய்கையார். இறைவன் சங்கர நாராயணஞக் காட்சி தந்து நம சங்கையையும் தீர்த்துள்ளார். தில்லை யும் நெல்லையும் இவ்வொற்றுமைக்கு சான்ருகும். மதி சூடியானும் மது சூதனப் பெருமாளும் ஒன்ருக எழுந் தருளிக் காட்சியருளும் திருப்பதி திருச்சாலைத் துறை.

திருச்சாலைத் துறை என்பது இன்று தமிழகத்தில நெல்லை மாவட்டம் அம்பா சமுத்திரத்தில் மேலப் பாளையந் தெருவிலுள்ள அருள்மிகு திருமூல நாத சுவாமி ஆலயமாகும். இக்கோவில் முற்காலத்தில் முள்ளி நாட்டு இளங்கோக்குடி திருசசாலைத் துறை என்று கல்வெட்டுக்களில் குறிக்கபபட்டது. இவ்வாலயத்தின் பழமைக்குச் சான்ருக மணிவாசகர் காலத்தவனுய 2-ஆம் வரகுணனின் கல்வெட்டொன்றுள்ளது. அவ்வட் டெழுத்துக் கல்வெட்டு சிதைவுடைய தாக விருப்பதால் மன்னவனின் ஆட்சியாணடை அறிய முடியவில்லை. அத்தொல்லெழுத்து இங்கு நின்ற கோலத்தில் அருட்காட்சியருளும் திருமாலை "திருச்சாலைத் துறை நின் றருளிய பெருமாள" எனக் குறிக கின்றது. மன்னவனும் மாறஞ்சடை யனின் காலததில இளவெண்மை கடத்திருக்கை காவிதியார் இவ்வூர் சபையாரிடம் முப்பது காசுகள் அளித்துள்ளார். அப்பணத்திற்குக் கெடுதலின்றி அதன வட்டியிலிருந்து திருச்சாலைத்துறை நின்றருளிய பெரு மாளுக்கும், திருமூலத்தானத்துப் படாரர்க்கும் தினம் உரி நெய்யால் விளக்கெரிப்பதாகவும் சபையார் இசைந்துள்ளனர்.

மற்ருெரு கல்வெட்டு சோழன் தலை கொணட வீரபாண்டியனின் எட்டாம் ஆட்சியாண்டைச் (கி.பி. 954) சேர்ந் தது இவ்வூரில் ஸ்ரீகானச் சித்திர கூடத்திலிருந்து சில வைணவ அடி யார்கள் வேதமோதி வந்தனா. அவர்களுக்குத் தனுர் மாதம் சோதி நாளில் (மார்கழி மாதம் பௌர்ணமி அன்று) உணவளிப்பதற்காக வெணபு நாட்டு நால்கூர் திணைக்களத்தான் சாத்தன் என்பான சபையார் வசம் நிலமளித்துள்ளான். இக்கல்லெழுத் திலிருந்து இங்கு வைணவ அடியார் கள் நாடு நலமுற நான்மறையோதிய செய்தியையும், அவர்களுககு உண வளிக்க நல்வழி வகுத்த நல்ல உள்ளத் தையும் அறிய முடிகிறது.

சோழ பாண்டியர்கள் காலக் கல் வெட்டொன்றும், வீரபாண்டியன் காலத்து கப்பலூருடையான் கல் வெட்டொன்றும் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. அவற்றில் "திருச்சாலைத் துறை நின்றருளிய பெருமாள்" "திருச்சாலைத் துறை கருமாணிக்கப் பெருமாள்" எனக் குறிக்கப்பட்டுள்ளன.



# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலுள்ள கீழ்வரும காட்டேஜுகளுக்கான வாடகை விவரங்கள் 1–12–78 முதல கீழ்ககண்டவாறு மாறறஞ் செயயபபட்டுள்ளன.

| எண் | காட்டேஜ் அல்லது அறைத் தொகுதியின் பெயா | தற்போது வசூலிககப் படும்தொகை (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| | | ரூ. |
| 1. | எச் ஆர். காவியப்பா காட்டேஜ் | 100–00 |
| 2 | நாராயணகிரி காட்டேஜஸ் 1 to 4, 13 to 20 | 40–00 |
| 3. | டி. பி, காட்டேஜ (உளளே) 1 to 8; ஏ to ஜி, III வது வரிசை 1 மற்றும் 16, சிஎம்சி; விவிசி-6; எஸஎனசி; கேவி ஆர்; விவிசி-1; விவிசி-8; டிபிசி-10 | 30–00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | 18–00 |
| | (b) ,, ,, B பகுதி | 12–00 |
| 4 | டி பி காட்டேஜஸ் (வெளியே) விவிசி, எம்பிசி; ஏடிசி. | 25–00 |
| | (a) மேற்படி காடடேஜின் A பகுதி | 15–00 |
| | (b) ,, ,, B ,, | 10–00 |
| 5 | டி.பி காட்டேஜஸ்-IIIவது வரிசையிலுள்ள தனிஅறைகள் | 10–00 |
| 6 | எஸ்.வி ஜி.எச்-இல் உளள பெரிய அறைத் தொகுதிகள | 35–00 |
| 7. | எஸ் வி.ஜி.எச-இன மூலையிலுள்ள அறைத் தொகுதிகள் | 25–00 |
| 8 | எஸ வி.ஜி எச்-இல் உள்ள வேறு அறைத் தொகுதிகள் | 20–00 |

| திருப்பதியில | | கிடைக்கும் அறைகள் எண்ணிக்கை | |
|---|---|---|---|
| 1 | தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ: (இரண்டு படுக்கைகளைக் கொணட அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 18 | ரூ. 16/– |
| 2. | ஸ்ரீநிவாச சத்திரம (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொணட அறைகள்)இரணடு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு | 30 | ரூ 12/– |
| 3. | ஸ்ரீநிவாச சத்திரம் (கீழ்ப்பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொணடது) நான்கு படுக்கைகளைக கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு | 40 | ரூ. 15/– |

குறிப்பு: மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவர்,

தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# காணவில்லை

'சங்கமம்'



மேற்கணட படத்தில் காணபபடும் என் காதல் தலைவன், என் உயிருக்கு உயிரானவன் என்னைப் பிரிநது எஙகோ சென்று விட்டான். அவனது அடையாளமென எதனைச் சொல்வேன் ? காயம்பூ வண்ணன, செங்கமலக் கண்ணன். மார்பிலே கௌஸ்துப மணியை உடையவன். இடது கையில் சங்கும், வலதுகையில் சக்கராயுதமும் தரித்தவன். அவனுக்குப் பெயர் ஒன்றா ! இரணடா ! மாயோன், மாதவன், நாரணன, கேசவன, சீதரன், திருமகன், பூமி கொழுநன், விண்டு, விறலரி, திருவிக்கிரமன, உந்திபூத்தோன், உவண முயர்ந்தோன், வாமனன், கண்ணன், கிருஷ்ணன், கோவிந்தன், அச்சுதன், ஆழ்கடற்றுயின்றோன், அரவணைச் செல்வன், சக்கிராயுதனன், சங்கமேந்தி, கருங்கடல் வண்ணன், கமலக் கண்ணன், சாரங்கபாணி, பஞ்சாயுதன், உலகினையளந்தோன், நரசிங்கன், ஆதிவராகன், பதுமநாபன், மதுசூதனன், தாமோதரன், பீதாம்பரன், காவற்கடவுள், முராரி, முகுந்தன், பெருமாள், பிரமன் தநதை, நெடியோன், காகுத்தன், இராமன, அறிதுயிலமாநதோன, படி முழுதிடந்தோன், அலகைமுலையுண்டோன், சௌரி, ஆதி, பகவன், பூவை வண்ணன், புணரியிற்றுயின்றோன், பின்னை கேள்வன், இருடிகேசன், தசாவதாரன, குறளன், நெடுமால், வளவன், சூரியோன், நந்தகோபாலன், வாசுதேவன், துளபமௌலியன், அனந்த சயனன், வைகுந்த நாதன், ஆயிரம் பெயரோன், அரிமால், அருந்தமன், உவனகேதனன், பஞ்சவர்க்குத் தூதன், வேலையிற்றுயின்றோன், துழாய் மௌலி, முணடகாசனை வேள்வன், தேவகிமைந்தன், கலசலோசனன், உலகுண்ட பெம்மான், கருணாகரன், பகையூர் வாகனன், ஆயன், வரையெடுத்தோன், கற்கி,' என இவ்வாறு பல பெயரால் அழைக்கப்படுபவன் என்னைத் தவிக்க விட்டுவிட்டு எங்கோ சென்றுவிட்டான் யாராவது கண்டால் என் துயரத்தினை எடுத்துக் கூறி அவனை என்னிடம் அனுப்புமாறு வேணடிக் கொள்கிறேன். அல்லது அவன் இருக்கும இடத்தை தெரிவித்தால் நன்றியுடன் இருப்பேன்.

கணணா ! என் அருமை மனனா !

உன் பெருமையினை, அருமையினை உணராது, செல்வம், பதவி, புகழ் முதலான இவ்வுலக மாயைகளில் சிக்கி உன்னை மறந்த - புறக்கணித்த- என் பெருந்தவற்றை உணர்ந்து கொண்டேன். உன்னைக் கவனியாது உன்னை அடையாது அலட்சியமாக இருந்து பாவியானேன். நீ கருணையின் வடிவல்லவா ? கோவர்த்தன கிரியெடுத்து அன்று ஆயர்களைக் காத்தவனல்லவா ? ஊழி காலத்தில் உலகங்களை உண்டு அனைத்து உயிர்களையும்காத்த பெருமான் நீயல்லவா? கஜேந்திரன் துயரைத் துடிதுடித்து தீர்த்தவனலலவா ? பாஞ்சாலியின் மானம்காத்து துயர் தீர்த்த கருணை வளளலும் நீதானே ? உன் மீது அன்பும் பக்தியும பூண்டவர்க்கு அனைத்து நலனையும் அளிப்பவனல்லவா? அன்று சிசுபாலனின் நூறு தவறுகளைப் பொறுத்த பெருமானாகிய நீ என் இநதத் தவற்றை மன்னிக்க மாட்டாயா ? உன்னை அடையத் துடிக்கும் என் உள்ளத் துடிப்பை எவ்வாறு நான் உனக்கு உணர்த்துவேன்? பால் கசந்து, படுக்கை நொந்து. ஊனின்றி, உறக்கமின்றி, உலகத்துப் பொருள்களையும். வாழ்வையும் வெறுத்து நிற்கும் என் மனப் பக்குவத்தை உணரமாட்டாயா ? மலர் போன்ற உன் பாதத்தைத் தழுவி, உன்னுடன் ஒன்றிவிடத் துடிக்கும் என் விருப்பத்தை இயற்கைப் பொருள்களிடத்தெல்லாம பலவாறு எடுத்துக கூறி உன்னைத் தேடி கூறுமாறு தூது அனுப்பினேனே ! அவை ஒனறும் என் வருத்தத்தை,உயிர்த்துடிப்பை,விருப்பததை உனககு உணர்த்தவில்லையா? அருமைத் தலைவா !

என் ஆணவம், செருக்கு அழிநதது! நேற்றுவரை இனித்த, இந்த உலகப் பொருள்களெல்லாம், இன்ப போகமெல்லாம், மாயை நீக்கியதால் இன்று எனக்கு எட்டிக்காயாகக் கசக்கிறது. என் பெருந்தவற்றை உணர்ந்து கொண்டேன். என்னை மன்னித்து அருளமாட்டாயா? என்னால் இனி தாங்கமுடியாது! கண்ணா! நீ எங்கிருந்தாலும் உன்னைத் தேடித் திரியும் என்னை உன்னுள் ஒன்றாக்கிக் கொள்ள விரைந்து வா.

இப்படிக்கு
உன்னையே நினைத்து ஏங்கிக்
துடிக்கும்

உன்னுடன் ஒன்றிட தவங்கிடக்கும்
**'ஜீவாத்மா'**



(8-ம் பககத தொடாசசி)

ஆதி சஙகரரின் சோபான பஞ்சக சுலோகஙகள் ஐநதிலும் வேதம், வேதம் எ ன ற வேதமயம தான. எடுத்த எடுப்பிலேயே,

**வேதோ நிதய மதீயதாம**
**ததுதிதம காம ஸவதுஷ்டீய தாம ||**

என்று ஆரம்பிககிறா. வேதத்தை தினம சொல்லி அதில் கூறியபடி காமம் செய என்பதுஇதன் அர்ததம். மூன்றும சுலோகத்தின் முதலடி யில் வேத உட்பொருளில் நாட்டம் கொள்ளச் சொல்கிறா.

**வாக்யார்த்தஸ்ச விசார்யதாம**
**ஸ்ருதிசிர: பக்ஷ' ஸமஸ்ரீய தாம ||**

வேதவாககியங்களின் கருததை ஆராய்ந்தறிகஎன்பதுமுதலகட்டளே. அதன்படி ஏற்றுநட என்பது அடுத்த ஆகஞை. வேதததிற்கு ஒத்த வாதங் களே தேடித் தெரிந்து கொளள வேணடும எனபது மூனறும வாக கியம. வேதத்தின் உட்கருததுக்களே நனறுக உரை. எங்கெல்லாம் சென்று புரிந்து கொள்ளவேணடுமோ அவ் வளவும செய். வேத அறிவு கிடைக் கும் வாயப்பு எது அமையினும் விட்டு விடாதே. ஆதிசங்கரரின் ''கௌபீன பஞ்சக''மும வேத முழக கத்துடனேயே தொடங்குகிறது. 'வேதாநத வாக்யேஷுஸதா ரமநத' என்று யதிகளே அறிமுகப்படுத்துவது முதல் வாக்கியம. யதி எனபது துறவியைக் குறிக்கும் சொல். யதி ராஜர் என்று ராமானுஜருக்கும் ஒரு பெயர் உண்டு. மூனிவர் தலேவன் என்று பெயர். அடக்கம் எனற அர்த்தமும் இதற்கு உணடு.

## தமிழ் நூல்களில்

தமிழில் மிகப் பழமையான தொல் காப்பிய நூல் வேதத்தை ''அறிவன் நூல்'' என்கிறது. 'அநதணர் நூல்' என்கிறது குறள். 'திறவோர் காட்சி' என்கிறதுபுறநானூறு. வேண் டிய விதி, விலக்குகளேத் தெரிவித்து மணணில் மககளே வாழ வைப்பதே வேதம்.

**''அகத்தெழு வளியிசை அரிலதப**
**நாடின் அளவில கோடல்**
**அந்தணர் மறைத்தே''**

எனபது தொல்காப்பிய ஸுூத்திரம. எழுதாக்கிளவி, செய்யாமொழி, மறை, கேள்வி எனபன வேதத்தைக் கூறும் தமிழ்ச் சொற்கள்.

''புவிக்கெல்லாம் வேதமே அன்ன ராமன'' எனபது கைகேயின் பாராட்டு. 'இலங்கிய நான் மறை அனேத்தும அங்கம ஆறும், ஏழிசை யும், கேளவிகளும் எண் திக்கும் எங்கும் நிரம்பிய நாஙகூர்'' என்று திருமங்கையாழ்வார் போற்றுகிறா. ''வேதத்தைவிட்ட அறம வேறில்லே'' என்கிறா திருமூலர். பாரதியாரும் ''வேதம் நிறைந்த தமிழ் நாடு'' என்றே தான் பிறந்த மணணேப் போற்றுகிறா.

''நால் நிறத்த வேத நூவர்'' என கிறது திருச்சந்த விருத்தம்.

## வேதத்தின் ஸ்வரூபம்

வேதத்தின் ஸ்வரூபமே மந்திர மயம். அகரம் முதல் க்ஷகரம் வரை 51 அக்ஷரங்கள் வேதத்தில் உள்ளன. அவை அனேத்தும் மஹா சரஸ்வதி யின் பீஜாக்ஷரங்கள். ஆகவே வேத பாராயணத்திஞல் இந்த மந்திர சக்தி காரணமாக ஈஸ்வர சாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. இதற்கு ''மந்திர யோகம்'' எனறும் பெயா.

வேதததிற்கு அறிவை அளிப்பது என்ற பெயரும் உணடு. ''சந்தஸ்'' என்ற பெயரும் உணடு பிறருக்கு அறிவை மறைப்பது என்று இதன் பொருள். இவ்விரணடையும் சேர்த்துப் பார்த்தால் பிறருக்கு அறிவளிக்கும் மெயயறிவை உய்த் துணரும் வகையில் மறை பொரு ளாகக் கூறும் இயல்புடையது வேதம் என்பது தெரியவரும். சந்தஸ் என்ற சொல்லே தமிழில் 'மறை' எனப் பட்டது. ''மறையாய நால் வேதத் துள் நின்ற மலர்ச் சுடரே'' என கிறா நம்மாழ்வார்.

வேதம பல விஷயஙகளேப படிப் படியாக தெரிவித்த போதும் ஆத் மோஜஜீவனத்திற்கு ஏதுவான அர்த்த விசேஷங்களேச சொல்லுவ திஞலேயே அதறகு அதிகபபெருமை.

## பலன் என்ன

இநத வேதத்தை ஓதுவதால் பலன என்ன? சப்த லாபம், ஆத்த லாபம் எனற இருவகை பலன் ஏறபடும.

நெருபபு என்ற சொல்லுக்கு அர்த்தம் தெரியாமல் நெருபபில் கை வைத்தாலும் சுடும. அதுபோல வேதத்தின பொருள் அறியாமல் ஓதிஞலும் அதஞல் பலன் ஏற்படவே செய்யும். பொருள் தெரிந்து ஓதிப் பயன் பெறுவது அர்த்த லாபம்.

வேதம் அநாதி. அதாவது ஆதி அநதம் கண்டு இன்ன காலத்தில் தோன்றியது, இனன காலத்தில் முடிவடையும் என்று சொல்ல முடி யாதது. ஒரு காலத்தில் தோன்றி யது என்றுல் பிற காலததிற்குப் பயன்படாது எனற குறை ஏற்படும. வேதங்களுக்கு அக்குறையில்லே. அப்படியே ஒருவரால செய்யப் பட்டது என்றுல் சிறிதளவாவது அதில் மருளும மயக்கமும் இருக்கும. ஒருவராலும் செய்யப்பட்டதில்லே யாதலால் அக்குறையும் அதறகு இலலே.

அநாதியான வேதம ஒவ்வொரு பிரளயத்திலும் இறைவனிடம் அடங்கி விடுகிறது. பிறகு உலக சிருஷ்டி ஆரம்பத்தில், இறைவன் ஹம்ஸ ரூபியாக இருந்து பிரும் மனுக்கு உபதேசித்து வெளிப்படுத்து கிறர்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

## பஞ்சரத்ன மாலா

தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் திருமதி. எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்களால் பாடப்பெற்ற 'ஸ்ரீவேங்கடேஸ்வரா பஞ்சரத்ன மாலா' எனும் ஒரு எல். பி. இசைத்தட்டு 1-10-79 அன்று, அதாவது திருமலை பிரம்மோற்சவத்தின் இறுதிநாளன்று ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமிக்கு நிவந்தனம் செய்யப்பட்டது. இதனை ஒட்டி திருமலையில், அன்று காலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை தி. தி. தே. செயலாட்சித்தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் வரவேற்றுப் பேசுகையில் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமையை பரப்பிடும் வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருமதி. எம். எஸ். சுப்புலட்சுமி அவர்களின் உதவியைக் கொண்டு 5 எல். பி. இசைத்தட்டுகளை வெளியிட உள்ளது எனறு கூறி, இவ்வகையில் இது முதல் இசைத்தட்டு என்று குறிப்பிட்டார். இவ்விழாவில் பங்கேற்று உரையாற்றிய தி. தி. தே. மேலாண்மைக் குழுத்தலைவர் டாக்டர். என். ரமேஸன் அவர்கள், அனனமாச்சார்யா கீாத்தனைகளை இசைமூலம் பரப்புதற்கு திருமதி. எம். எஸ். சுப்புலட்சுயை விட வேறு தகுந்த நபர் கிடைப்பது அரிது எனக் குறிப்பிட்டு மற்ற நானகு எல். பி. இசைத்தட்டுக்கள் காலக்கிரமத்தில் வெளிவர ஆவன செய்ய வேண்டும் என்று எச்.எம்.வி. இசைத்தட்டு நிறுவனத்தாரைக் கேட்டுக் கொணடார்.

## குழந்தைகள் கண்காட்சி

உலகக்குழந்தைகள் ஆண்டு முன்னிட்டு, தி.தி. தேவஸ்தான ஊழியர்களின் குழந்தைகள் பங்கேற்கும் வகையில் ''குழந்தைகள் கண்காட்சி'' ஒன்றினை தி. தி. தேவஸ்தானம் 8-11-79 அன்று திருமலையிலும், 9-11-79 அன்று திருப்பதியிலும் நடத்த உள்ளது.

## பொதுநல பொருட்காட்சி

திருமலை பொதுநலத்துறை, தன் வரலாற்றில் முதல் தடவையாக, சென்ற மாதம் நடைபெற்ற வருடாந்திர பிரம்மோற்சவத்தை முன்னிட்டு, திருமலை லியோ கிளப் உதவியுடன், பொது நலத்துறை அலுவலகத்தில் பொதுநல பொருட்காட்சி ஒன்றினை நடத்தியது. இப்பொருட்காட்சியினை 26-9-79 அன்று தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர்.கே. பிரஸாத் அவர்கள் திறந்து வைத்து உரையாற்றுகையில், இப்பொருட்காட்சியினை ஏறபாடு செய்த தி. தி. தேவஸ்தானத்தின் திருமலை பொது நல மருத்துவர் டாக்டர். வை. கிருஷ்ணமூர்த்தியின் சீரிய முயற்சியினை பாராட்டினர்.



பொது நல பொருட்காட்சியினை தி.தி.தே. செயலாட்சித்தலைவர் திறந்து வைக்கும் போது.

30–9–79 அன்று திருமலையில் திரு. உஷஸ்ரீ அவர்களால் எழுதப்பெற்று தி. தி. தேவஸ்தானத்தாரால் பிரசுரிக்கப்பட்ட, ''பாகவதம்'' எனும் தெலுங்கு நூல் தி. தி. தே. மேலாண்மைக்குழுத் தலைவர் டாக்டர். என். ரமேஸன் அவர்களால் வெளியிடப்பட்டது.



தொடர்நது பேசுகையில் இப பொருட்காட்சி திருமலையில நிரந்தர மாக அமைதல அவசியம் என்றும கூறினர். தி. தி. தே. உதவி செய லாட்சித தலைவாகள திரு. ஜி. டி. நாயுடு (S) திரு. எஸ். முனுசாமி நாயுடு (திருமலை) ஆகியோரும இவ் விழாவில் பங்கேற்றனர்.

## வருடாந்திர பிரம்மோற்சவம்

திருமலையில் ஸ்ரீ வேஙகடேஸவர சுவாமியின் இவவருட பிரம்மோற சவம் 22-9-79 முதல் 1-10-79 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப் பட்டது. நாடடின் பல்வேறு பகுதி களிலிருந்து ஏராளமான பக்தாகள் இப்பிரம்மோற்சவத்தின் போது குறிப்பாக 27-8-79 அன்று நடை பெற்ற கருட சேவையன்றும், 30-9-79 அனறு நடைபெறற ரதோற் சவத்திற்கும் திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார்கள். இப்பத்து நாட்களின்போது திருமலை யில் காலையிலும் மாலையிலும் புகழ் பெற்ற அறிஞர்களும் கலைஞாகளும் பங்கேற்ற சொறபொழிவுகளும், இன்னிசை நிகழச்சிகளும நடை பெற்றன. இபபத்து நாள உற்சவத் தின் போது உணடி மூலமாக 4. 3 கி. கி எடையுளள தஙகமும, 35 கி. கி எடையுளள வெள்ளியும், ரூ. 31. 7 இலட்சமும வசூலாகியது.

---

வட ஆற்காடு மாவட்டம் ஆரணி சாாப்பணுப் பேட்டையில் உளள புகழ் பெறற புராதன கில்லா வரத ராஜபெருமாள் ஆலயத்தில் சுமார் 12 வருடங்களாக பல காரணங் களால் நடை பெருமல் இருந்து வநத பிரமமோற்சவம, ஆரணியில் உள்ள சர்வகட்சியினரைச் சோந்த பிரபல வியாபார பிரமுகர்களைக் கொண்டு மேற்படி ஆலயத்திற்கு அமைக்கப்பட்ட விழாக் குழுவினரின் பெரு முயற்சியால் மேற்படி ஆலயத் தில் திருக்கச்சி நம்பி உருவச்சிலை பிரதிஷடை செய்தும் ஸ்ரீவரத ஆஞ்ச நேயர் ஆலயததை புதுப்பித்தும் மற்றும் மேற்படி ஆலயத்தில் நடந்த பல திருப்பணிகள முடிநது லக்ஷார்ச்ச சனை விழா நிகழ்சசியுடன் நடை பெற்றது. அஷடபந்தனமகா-குமபாபிஷேக நிகழச்சியுடன 14-9-79 முதல மேறபடி ஆலயத தின் பிரம்மோற்சவம் கருடசேவை உற்சவ நிகழச்சியுடன் நடை பெற்றது. 7-ம நாள் திருத்தோ விழாவும் மிகச்சிறப்புடன் பலஆயிரக கணக்கான ஆஸ்திக பக்தர்கள கலநது கொண்ட காக்ஷியுடன் நடை பெற்றது. ஆலயத்தில் பிரதிவருஷ மும் வைகாசி மாதத்தில் இதற்கு முன்பிரம் மோற்சவமநடைபெற்றது. இது மேற்படி திருப்பணியின் காரண மாக இவ்வாணடில் 14-9-79 நடை பெற்றது குறிப்பிடத்தக்கது.

தகவல் '

திரு. ஏ. எம் கிருஷ்ணமூர்த்தி,
ஆரணி.

---

*(சில தவிர்க்கமுடியா காரணங்கள் முன் னிட்டு 'முக்கவி கண்ட காப்பியம்' எனும தொடர் கட்டுரையினை இம்மாத இதழில் வெளியிட முடியவில்லை. ஆ-ர்.)*

---

# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்.

# வருடாந்திர பிரம்மோற்சவம்



திருப்பதியிலிருநது 3 கி. மீ. தூரததிலுள்ள திருச்சானூரில வீற்றிருக்கும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமியின் பெண துணைத் தெயவமான ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயிலின் வருடாந்திர பிரம மோறசவம 16-11-79 முதல் 24-11-79 வரை நடைபெற உளளது.

## பிரம்மோற்சவ முக்கிய நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 21-11-79 | புதன்கிழமை | கருடசேவை |
| 23-11-79 | வெள்ளிக்கிழமை | ரதோற்சவம் |
| 24-11-79 | சனிக்கிழமை | பஞ்சமிதீர்த்தம் (சக்ரஸ்நானம்) |

இப்பிரம்மோற்சவத்தினை ஓர் அரிய வாய்பபாகக் கொண்டு பக்தர்கள் திருசசானூருக்கு வருகை புரிநது தாயாரின அருளுக்கு பாத்திரமாவாாகளாக!

# ராசிபலன் (1-11-79 முதல் 30-11-79 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., PhD.,
திருப்பதி.

## மேஷம்

**(அசுவனி, பரணி, கார்த்திகை முதல பாதம முடிய)**

*ராகுவினுல் கவலைகள்; சனியினுல் 3-ம் தேதி முதல் உடல்நல மேன்மை, வெற்றி; குருவினுல் பணவரவு, மதிப்புயர்தல், மகிழ்ச்சி, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வீடு வாய்ப்பு அல்லது மக்கட்பேறு; செவ்வாயினுல் உடல்நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப் பட்ட தொல்லைகளுக்குள்ளாதல் அல்லது தீய சேர்க்கையினுல் கவலைகளுக்குள்ளாதல். 6-ம் தேதியிலிருந்து பிள்ளைகள் அல்லது புதல்விகள் காரணமாக கவலைகளுக்குள்ளாதல் அல்லது எதிரிகள் காரணமாகத் துன்பங்களுக்குள்ளாதல்; சூரியனுல் 16-ம் தேதிவரை பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல அவதியுறல், பினனர் உடல்நலம்கெடல் அல்லது மனைவிக்கு மனயமைதியின்மை; சுக்கிரனுல் புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது பணவரவு; புதனுல் 25ம் தேதிவரை பணவரவு, வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள், அல்லது மக்கட்பேறு. பின்னர் கருத்துவேற்றுமைகள்.*

## ரிஷபம்

**(கார்த்திகை 2-ம பாதம முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம பாதம் முடிய)**

*ராகுவினுல் கருததுவேறுபாடுகள்; சனியினுல் பிள்ளைகள் அல்லது புதல்வியரிடமிருந்து பிரிவு அல்லது கருத்துவேறுபாடுகள், பணநஷ்டம்; குருவினுல் மனயமைதி பறிபோதல்; செவ்வாயினுல் 6-ம் தேதி வரை பணவரவு ஆனுல உடல் நலம் கெடல் அல்லது தீய நட்புறவினுல் கவலைகளுக்குள்ளாதல, சூரியனுல் 16-ம் தேதிவரை உடல்நல மேன்மை, வெற்றி ஆனுல் பின்னர் பிரயாணம் அல்லது வயிற்றுவலியினுல் அவதியுறல்; சுக்கிரனுல் 23-ம் தேதி வரை பெண்கள காரணமாக துன்பங்களுக்குள்ளாதல. ஆனுல் பின்னர் கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது புதிய வீடு வாய்ப்பு; புதனுல் 23-ம தேதி வரை கருத்து வேறுபாடுகள் ஆனுல் பின்னர் வெற்றி.*

## மிதுனம்

**(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)**

*ராகுவினுல் பணவரவு; சனியினுல் நணபர்களுடன் மனமுறிவு அல்லது பண நஷ்டம் அல்லது உற்ருர் உறவினருடன் பிரிவு; குருவினுல் ஏமாற்றங்கள்; செவ்வாயினுல் 6-ம தேதி வரை அலுவலகம் அல்லது எதிரிகள காரணமாக துன்பங்களுக்குள்ளாதல் அல்லது வீட்டில் திருடுபோதல். பின்னர் பிள்ளைகள் மூலம் அல்லது தவருன வழியில் பணவரவு; சூரியனுல் 16-ம் தேதி வரை உடல்நலம் காரணமாக அல்லது எதிரிகள் காரணமாக கவலைகளுக்குள்ளாதல் ஆனுல் பின்னர் உடல்நல மேன்மை, வெற்றி; சுக்கிரனுல் 23-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக்குறைதல. பின்னர் பெண்கள் காரணமாக துன்பங்களுக்குள்ளாதல்; புதனுல் 23-ம் தேதி வரை வெற்றி அல்லது தனனிலை உயர்தல், ஆனுல் பின்னர் மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள்.*

## கடகம்

**(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)**

*ராகுவினுல் பண நஷ்டம்; சனியினுல் 3-ம் முதல் பணவரவு அல்லது தன்னிலை உயாதல் அல்லது வாகன வாய்ப்பு, உடல்நல மேன்மை மற்றும் எலலாவகைகளிலும் நன்மை; குருவினுல் பணவரவு, வெற்றி, செவ்வாயினுல் அலுவலகம் அல்லது வேறு காரணங்கள் முன்னிட்டு கவலைகளுக்குள்ளாதல் மற்றும் வீட்டில் திருடுபோதல் அலலது உடல்நலம் கெடல்; சூரியனுல் உடல்நலம் கெடல் அல்லது உடல்நலம் கெடுவதால் கவலைக்குள்ளாதல்; சுக்கிரனுல் 23-ம் தேதிவரை விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல்; பணவரவு, புதிய நண்பர்கள் அல்லது மக்கட்பேறு, பின்னர் உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக் குறைதல்; புதனுல் 23-ம் தேதிவரை பிளளைகள் அல்லது மனைவியுடன் கருத்துவேறுபாடுகள் ஆனுல் பின்னர் பணவரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி.*

## சிம்மம்

**(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)**

*ராகுவினுல் கவலைகள்; சனியினுல் பணநஷ்டம்; குருவினுல் கருத்து வேறுபாடுகள், பணநஷ்டம் அல்லது தனனிலை இழத்தல்; செவ்வாயினுல் பணநஷ்டம் அல்லது உடல் நலம் கெடல்; சூரியனுல் 16-ம் தேதிவரை பணவரவு அல்லது தன்னிலை உயர்தல் ஆனுல் பின்னர் உடல் நலம் கெடல்; சுக்கிரனுல் புதிய நல்ல நண்பர்கள, புதிய உறவுகள், பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், பணவரவு அல்லது மக்கட்பேறு; புதனுல் 23-ம் வரை பணவரவு அல்லது குடும்பத்தில் மகிழ்ச்சி ஆனுல் பின்னர் புதிய நண்பர்கள் கிடைத்தாலும் தன்னுடையதவருன நடவடிக்கையின் காரணமாக துன்பங்களுக்குள்ளாதல்.*

## கன்னி

**(உத்திரம் 2-ம் பாதம முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)**

*ராகுவினுல் கவலைகள்; குருவினுல் பிரயாணமும், உடல் நலம் கெடலும்; சனியினுல் பிரயாணம் மற்றும் பண நஷ்டத்தினுல் அல்லது மற்ற*

காரணங்கள முன்னிட்டு கவலைக்குள் ளாதல் அலலது உற்ருர் உற வினருடன் பிரிவு; செவ்வாயினுல் 6-ம் தேதிவரை வெற்றி ஆனுல் பின்னா பண நஷ்டம அல்லது மற்ற காரணஙகள் முன்னிட்டு கவலைககுள் ளாதல்; சூரியனுல் 16-ம் தேதிவரை பனநஷ்டம் அல்லது வஞ்சிக்கப்படல அலலது கணவலியினுல் அவதியுறல் ஆனுல் பின்னர் பணவரவு அல்லது தன்னிலை உயர்தல்; சுக்கிரனுல் பண வரவு, ஆடை ஆபரணங்கள் அல்லது முயறசிகள வெற்றியடைதல் மற்றும் மதிப்புயர்தல், புதிய நண்பர்கள்; புதனுல் 23-ம் தேதி வரை புதிய நட்புறவுகள் ஆனுல் தன்னுடைய தீய நடவடிக்கையின் காரணமாக அஞ்சுதல்; ஆனுல் பின்னர் பொருள் கிடைக்கப பெற்ருலும் மதிப்புக் குறைதல்.

### துலா

**(சித்திரை 3-ம்பாதம் முதல, ஸவாதி விசாகம் 3-ம பாதம் முடிய)**

ராகுவினுல் பணவரவு, சனியினுல 3-ம் தேதி முதல் கவலைகள்; குருவி னுல் பணவரவு; செவ்வாயினுல் பண வரவு, வெற்றி; சூரியனுல் பண நஷ்டம் அல்லது பிரயாணம் அல்லது உடல்நலம கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதி யுறல். 16-ம் தேதிக்குப்பிறகு வஞ்சிக் கப்படல், பண நஷ்டமன்றி கண வலி யினுல் அவதியுறல்; சுக்கிரனுல பண வரவு, மதிப்புயாதல், குடும்பத்தில் மகிழ்ச்சி அல்லது தானிய வகைகள் கிடைக்கப் பெறல் அல்லது அலுவல கம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் மதிபபுயர்தல் அல்லது மககட்பேறு; புதனுல் மதிப்பிழத்தல் மற்றும் தவருன ஆசோசனையைக் கேட்டதன் பேரில் பணநஷ்டம்.

### விருச்சிகம்

**(விசாகம் 4-ம பாதம முதல, அனு ஷம கேட்டை முடிய)**

ராகுவினுல் கருத்துவேறுபாடுகள்; குருவினுல் பணநஷ்டம்; சனியினுல் பணவரவு அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல்; செவ்வாயினுல் 6-ம் தேதி வரை பணநஷ்டம் அல்லது மதிப்புக் குறைதல் ஆனுல் பின்னர் பணவரவு, வெற்றி; சூரியனுல் பணநஷ்டம; 16-ம் தேதிக்குப் பிறகு பிரயாணம் அல்லது வயிறு சமபந்தப்பட்ட நோயி னுல் அவதியுறல்அலலது பணநஷ்டம், சுககிரனுல் மகிழ்ச்சி, பணவரவு, தானியவகைகள், மதிப்புயர்தல் அல்லது மககட்பேறு; புதனுல் இகழ்ச்சிககுள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல்.

### தனுசு

**(மூலம, பூராடம், உத்திராடம் முதல பாதம முடிய)**

ராகுவினுல் தீய நடவடிககை களில ஈடுபடல், சனியினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக்குறைதல்; குருவினுல் பணவரவு, வெற்றி அல்லது தானிய வகைகள; செவ் வாயினுல் 6-ம் தேதி வரை பண நஷ்டம் அல்லது மதிப்புக்குறைதல் அல்லது உடலில் காயம் ஏற்படல், ஆனுல் பின்னர் பணநஷ்டம் அல்லது இகழ்ச்சிககுள்ளாதல்; சூரியனுல் 16-ம் தேதிவரை உடல்நலமேன்மை. மதிப்புயர்தல், வெற்றி அல்லது பண வரவு. பின்னர் எந்தவித நன்மை தீமையும் ஏற்படாது; சுககிரனுல் கேளிக்கைகளில் ஈடுபடல், புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது பண வரவு; புதனுல் 23-ம் தேதிவரை எதிரிகள் காரணமாக கவலைக்குள்ளா தல் அல்லது மதிப்புக குறைதல் அல்லது உடல்நலம் கெடல். ஆனுல பின்னர் பணவரவு, கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது வீடு வாய்பபு அல்லது மக்கட்பேறு.

### மகரம்

**(உத்திராடம் 2-ம் பாதம் முதல திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம முடிய)**

ராகுவினுல் கவலைகள்; குருவினுல் உடல்நலம் கெடல் அல்லது பிரயா ணம்; சனியினுல் கருத்து வேறுபாடு கள் அல்லது உடல்நலம கெடல் அல்லது தவருன நடவடிக்கையில் ஈடுபடல்; செவவாயினுல் 6-ம் தேதி வரை மனைவிக்கு மனமகிழ்ச்சி யின்மை அலலது வயிறு அல்லது கண சம்பந்தப்பட்ட நோயினுல அவதியுறல, பினனர் பணநஷ்டம் அல்லது உடலில காயம் ஏறபடல். அல்லது மதிப்புக்குறைதல்; சூரியனுல் உடல்நலமேன்மை, மதிப்புயர்தல், வெற்றி; சுககிரனுல் புதிய நல்ல நணபர்கள், புதிய ஆடை ஆபரணங் கள், பணவரவு, புதனுல் பணவரவு, வெற்றி, கேளிக்கைகளில் ஈடுபடல், அல்லது ஒரு வாகனவாய்ப்பு அல்லது ஒரு குழந்தைப் பேறு.

### கும்பம்

**(அவிட்டம் 3-ம பாதம முதல, சதை யம, பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)**

ராகுவினுல் கருத்து வேறுபாடு கள்; குருவினுல் கேளிக்கைகளில் ஈடு படல், சனியினுல் உறருா உறவினரி டமிருநது பிரிவு; செவ்வாயினுல் 6ம் தேதி வரை பண வரவு, வெற்றி, உடல்நலமேன்மை. ஆனுல் பின்னர் மனைவியுடன கருத்து வேறுபாடு அல்லது கண் அல்லது வயிறு சம்பந தப்பட்ட நோயினுல் அவதியுறல்; சூரியனுல் 16-ம் தேதி வரை பண நஷடம் அல்லது உடல் நலம் கெடல் ஆனுல் பின்னர் வெற்றி மற்றும மதிப்புயர்தல், சுககிரனுல் 23-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள் அல்லது மதிப்புக்குறைதல், ஆனுல் பின்னர் பணவரவு, அல்லது புதிய ஆடை ஆபரணங்கள அல்லது நலல நண்பர்கள்; புதனுல் 23-ம் தேதி வரை பணவரவு, வெற்றி அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் ஆனுல் பின்னர் மதிப்புக்குறைதல்

### மீனம்

**(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்தி ரட்டாதி, ரேவதி முடிய)**

ராகுவினுல் பணவரவு; குருவினுல் மனயமைதி பறிபோதல்; சனியினுல் பிரயாணம்; செவ்வாயினுல் 6-ம் தேதிவரை பிள்ளைகள் அல்லது உடல் நலம் அல்லது எதிரிகள் காரணமாக துன்பங்களுக்குள்ளாதல், ஆனுல் பின்னர் பணவரவு, வெற்றி; சூரிய னுல் 16-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை. ஆனுல் பின்னர் பணநஷ்டம் அல்லது ஏமாற்றங்கள் அல்லது உடல்நலம் கெடல்; சுக்கிர னுல் 23-ம் தேதி வரை பணவரவு, நல்ல நடவடிக்கைகளில் ஈடுபடல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள். ஆனுல் பின்னர் கருத்து வேறுபாடு கள் அல்லது உடல்நலம் கெடல்; புதனுல் 23-ம் தேதி வரை ஏமாற்றங் கள், ஆனுல் பின்னர் பணவரவு, வெற்றி அல்லது புதிய ஆடை ஆபர ணங்கள் அல்லது மக்கட்பேறு.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

**திருமதி. எம எஸ. சுபபுலடசுமி அவர்களால பாடபபெறற 'ஸ்ரீ வேஙக டேஸவரா பஞ்சரத்ன மாலா' எனும எல.பி இசைததட்டு ஹைதராபாததில 6-10-79 அன்று ஆநதிரமாநில முதல்வா டாகடா எம் சென்னுரெடடி அவர்களால் வெளியிடப்பட்டது**




இசைததட்டு வெளியீட்டு விழா வின போது முதல்வர் அவர்கள் உரையாற்றுகையில.



முதல்வருடன திருமதி. எம் எஸ். சுப்புலட்சுமி.



திருமதி. எம. எஸ். சுபபுலடசுமி அவர்கள, எச.எம் வி இசைத்தட்டு நிறுவனததினரால கௌரவிக்கப படுகின்றுர்.

# திருமலையில் இறைவனைத்தரிசிக்க வரும் ஏழை எளிய யாத்திரிகர்களுக்கு 'இலவச உணவு' வழங்க உங்களுக்கு விருப்பமுள்ளதா?

இந்துசமய இலக்கியங்கள், பல புராணக் கதைகளின் மூலம் ஏழை எளியோர்க்கு வழங்கப்படும் அன்னதான மகிமையைப்பற்றி விளக்கிக் கூறுகின்றன. அதுவும் குறிப்பாகத் திருமலை போன்ற திருத்தலத்தில் இறைவனைத் தரிசிக்கவரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப்படுவது சாலச்சிறந்ததாகும். அது போலவே இறைவனின் பிரஸா தங்களை இலவசமாக வழங்கப்படுதலும் மிக உன்னதமாகக் கருதப்படுகிறது.

இவ்வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் புகுத்தப்பட்ட "ஸ்ரீவேங்க டேஸ்வரா நித்ய பிரஸாத தான அறக்கொடை" திட்டத்தின் கீழ் நீங்கள், திருமலையில், இறைவனைத் தரிசிக்கவரும் ஏழை யாத்திரிகர்களுக்கு இறைவனின் பிரஸாதங்களான உணவுப் பொட்டலங்கள் அல்லது லட்டுகள் அல்லது வடைகள் ஆகியவற்றை இலவசமாக வழங்கலாம்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு ரூ. 500/-ஐ முதலில் அறக்கொடையாக வழங்குதல் வேண்டும். இத்தொகையினால் வரும் வட்டித் தொகையினைக் கொண்டு 20 ஏழை யாத்திரிகர்களுக்கு இலவசமாக பிரஸாதங்கள் அல்லது 'க்யூ' வரிசைகளில் வரும் யாத்திரிகர்களுக்கு 20 லட்டுகள் அல்லது 15 வடைகள் வழங்கப்படும். இவ் இலவச பிரஸாத வழங்கீடு, வருடத்தில் ஒருநாளின் போது—அது உங்கள் பிறந்த நாளாகவோ—திருமண நாளாகவோ—உங்கள் பிள்ளை அல்லது மகளுடைய பிறந்த நாளாகவோ—உங்கள் தாய் அல்லது தந்தையாரது நினைவு நாளாகவோ—அல்லது உங்களுக்கு ஏதேனும் ஒரு வகையில் பிடித்தமான நாளாகவோ (இருக்கலாம்)—நடைபெறும்.

ஒருநபர் எத்தனை அறக்கொடைகளாவது வழங்கலாம். ஒவ்வொரு அறக்கொடைக்கான இலவச பிரஸாத வழங்கீடு, நீங்கள் விரும்பும் வெவ்வேறு நாளின்போது நடைபெறும். குறைந்தபட்சம் 20 அறக்கொடைகள் வழங்கினால், அறக்கொடை வழங்கிய நபரைச்சார்ந்த 5 நபர்களுக்கு, இலவச பிரஸாத வழங்கீட்டு நாளின்போது, இறைவனின் இலவச தரிசன வசதி வழங்கப்படும் (இது 5 சிறப்பு தரிசன டிக்கட்டுகளின் மதிப்பான ரூ. 125-க்குச் சமமாகும்).

17—3—80 அன்று, அதாவது தெலுங்கு வருடப்பிறப்பு நாளன்று செயற்படுத்தப்படவிருக்கும் இத்திட்டத்திற்கான அறக்கொடைகள் இப்போது முதல் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

நீங்கள் அளிக்கும் இவ் அறக்கொடை தொகைகளுக்கு வருமானவரி விலக்கு உண்டு. நீங்கள் உங்களுடைய வருமானவரி கணக்கின் போது, இவ் அறக் கொடையினைச் சுட்டிக் காட்டி வரிவிலக்கு பெறலாம்.

அறக் கொடையாளர்கள், தொகையினை இந்தியாவில் உள்ள ஆந்திரா பேங்க் கிளை அலுவலகங்களின் மூலமாகவோ அல்லது தி. தி. தேவஸ்தானம் திருப்பதி எனும் முகவரியில் 'எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர்' எனும் பெயரில் 'டிமாண்ட் டிராப்ஃட்' ஒன்றினை எந்த வங்கி மூலமாவது வாங்கி "மேனேஜர் ஆந்திரா பேங்க், காந்திரோடு, திருப்பதி, 517501" எனும் முகவரிக்கு கீழ்க்காணும் விவரங்களுடன் அனுப்புதல் வேண்டும்.

பெயர், கோத்திரம் / குடும்பத்தின் பெயர் மற்றும் கிருஹஸ்தரின் / அறக்கொடையாளரின் முழு முகவரி:

இலவசமாக வழங்கப்பட வேண்டிய பிரஸாத வகை விவரம். (உணவுப் பொட்டலங்கள்/லட்டு/வடை)

இலவசமாக வழங்கப்படவேண்டிய நாள்:

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.